# மங்கை

ஏப்ரல் '94

குடும்ப சிறப்பிதழ்

★ என் தந்தை

*-சகுந்தலா பாரதி (பாரதியாரின் இளைய புதல்வி)*

★ ஸ்ரீரங்கம் காட்டழகிய சிங்கர் கோயில்

*(அருள் வலம்)*

★ குடும்ப பிரச்னையும் சட்டமும்

*-மாலினி கணேஷ்*

★ சில குடும்பங்களில் சில கணவர்கள்

★ "மருந்தே உணவு உணவே மருந்து"

*-மணிமேகலை கண்ணன்*

மற்றும் வித்தியாசமான பகுதிகளுடன்

விலை ரூ.6/-

TA—F-1



# அம்புலிமாமா

ஏப்ரல் 1994



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.

# பொம்மை

திரையுலகின் நட்சத்திரப் பத்திரிகை

மாதம் ஒருமுறை மலரும்
சிறப்புமிக்க வண்ண இதழ்

நட்சத்திர பேட்டிகள்,
சிறந்த சினிமா செய்திகள்,
வண்ணப் படங்கள்,
ரசிகர்களின்
விருப்பம் போல
என்றும் புதுமையுடன்
மலரும்

பொம்மை

தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

பெரிய அளவில்,
புதிய பகுதிகளுடன்,
ஒவ்வொரு மாதமும்
வெளிவருகிறது

விலை ரூ. 6/-
வருட சந்தா: ரூ. 72-00

இது ஒரு டால்டன் வெளியீடு




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## எல்லோருக்கும் கல்வி



எல்லோருக்கும் கல்வி அளிக்க வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை காட்டி நம் நாடு ஒன்பது நாடுகளின் உச்சி மாநாட்டைக் கூட்டியது. இந்த ஒன்பது நாடுகளும் மக்கள் தொகை மிக்கவை. பங்களாதேஷ், பிரேசில், சீனா, எகிப்து, இந்தோனேசியா, மெக்சிகோ, நைஜீரியா, பாகிஸ்தான், இந்தியா ஆகியவை அந்நாடுகள். இந்த நூற்றாண்டின் முடிவிற்குள் எல்லோருக்கும் கல்வி என்பதை எப்படி நடைமுறையில் கொண்டு வருவது என ஆலோசித்தன.

இது மிக நல்ல யோசனை என்றும் மனிதனின் முன்னேற்றதிற்காக அடிப்படைக் கல்வி அளிக்கக் கணிசமான தொகையைச் செலவு செய்ய வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. இதற்காக ஏற்கனவே உள்ள நிதி ஒதுக்கீட்டுடன் மேலும் பணம் திரட்ட வேண்டும் எனவும் இந்த உச்சி மாநாட்டில் தீர்மானிக்கப்பட்டது.

இதற்கான பணம் திரட்டத் தம் நாடுகளில் மேலும் வரி விதிக்க முடியாது என்றும் நிதி உதவிக்காக உலக வங்கியையும் அனைத்துலக நிதி நிறுவனத்தையும் அணுகுவது எனவும் அந்நாடுகள் தீர்மானித்தன. ஆனால் இந்த இரு அமைப்புகளும் தாங்கள் தாராளமாக உதவுவதாயும் ஆனால் ஒரு பகுதியை அந்நாடுகளே தம் நாட்டில் திரட்டிக் கொள்ள வேண்டும் என்றும் நிபந்தனை விதித்துள்ளன. மேலும் இதற்கு ஒரு உச்ச வரம்பும் வேண்டும் எனவும் கூறியுள்ளன. இந்த நாடுகள் நிபந்தனையைத் தளர்த்துமாறு இந்த அமைப்புகளை வேண்டிக் கொண்டுள்ளன.

அண்மையில் புது டில்லியில் நம் பிரதமர் கூட்டிய முதலமைச்சர்கள் மாநாடும் ஒன்பது நாடுகள் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டுள்ளது. இதனால் நாட்டில் எல்லோருக்கும் கல்வி நல்லவிதமாய் அளிக்கப்படும் என எதிர்பார்க்கலாம்.



மதிமுகம்: 94 ஏப்ரல் 1994 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



செய்திகளும் தகவல்களும்

# சிங்கப்பூரின் நல்லுதவி



பூங்காக்கள், மலர்த் தோட்டங்களை விரும்பி மாலை வேளைகளில் மனம் மகிழ நாம் அங்கு செல்கிறோம்.. ஆனால் 'தொழில்நுட்பத் தகவல் பூங்கா' என்ற ஒரு அழகிய தொழில் பேட்டை கர்நாடக மாநிலத்தில் பெங்களூருக்கு அருகே அமைக்கப்பட்டுள்ளது. மாணவர்களின் மனம் கவரும் இப்பூங்காவை சென்ற ஜனவரியில் பெங்களூருக்கு 18 கி.மீ. தொலைவிலுள்ள ஓயிட் பீல்டில் சிங்கப்பூர் பிரதமர் கோ சோக் டாங் ஆரம்பித்து வைத்தார்.

இந்தப் பூங்காவிற்கும் சிங்கப்பூர் பிரதமருக்கும் எப்படித் தொடர்பு என்றா கேட்கிறீர்கள்? சிங்கப்பூர் நமக்கு நேச நாடு. இரண்டாவது உலகப் போருக்கு (1939-45) முன் பல இந்தியர்கள் வேலையைத் தேடி பெடரேடட் மலேயா ஸ்டேட் என அப்போது வழங்கப்பட்ட மலேயா, சிங்கப்பூர் பகுதிகளுக்குச் சென்று அங்கே குடிபுகுந்தார்கள். சென்னை, தூத்துக்குடித் துறைமுகங்களிலிருந்து அக் காலத்தில் பாஸ்போர்ட், விசா என்பதெல்லாம் இல்லாமலேயே கப்பல் ஏறிப்போக எல்லோராலும் முடிந்தது. அதனால் பல நம் நாட்டவர் சிங்கப்பூரில் குடி புகுந்தார்கள்.

தென் சீனக் கடலில் உள்ள முனைத்தீவு சிங்கப்பூர் என்ற சிம்மபுரம். ஆங்கில மாலுமி சர். ஸ்டாபோர்டு ராபில்ஸ் 1819ல் இத் தீவை அடைந்தபோது அது ஒரு மீன்வர் கிராமமாக இருந்தது. அவர் அங்குள்ள அதிகாரிகளோடு ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு அதை ஒரு துறைமுகமாக்கலானார். கிழக்கு இந்திய கம்பெனி அப்பணியை மேற் கொள்ள சிங்கப்பூர் முன்

னேற்றம் காணலாயிற்று.

சிங்கப்பூர் 1858ல் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆட்சியின் கீழ் வந்த பிறகு நன்கு செழுமை அடைந்தது. அப்பகுதியின் மையமாகியது. பிரிட்டிஷ் கடற்படையின் முக்கிய தளமாயும் தென் கிழக்கு ஆசியாவின் உயர் ரகத் துறைமுகமாயும் அது மாறி உயர்வு பெற்றது.

இரண்டாவது உலகப் போரில் இது சிறிது காலத்திற்கு ஜப்பானின் வசம் இருந்தது. அப்போது தான் நேதாஜீ சுபாஷ் சந்திர போஸ் இங்கு இந்திய தேசீய ராணுவத்தை அமைத்தார். இவ்வுலகப் போருக்குப் பின் சிங்கப்பூர் சுதந்திரம் கோரவே 1959ல் இதற்கு தன்னாட்சி கிடைத்தது. லிகுவான் யூ முதல் பிரதமரானார். அதன் பின் அவர் நாட்டின் தலைவரானார். அவர் தலைமையில் சிங்கப்பூர் செல்வம் கொழித்து உலகில் தலைசிறந்ததாக விளங்கியது. நல்ல பொருளாதாரம் கண்ட சிங்கப்பூரின் இரண்டாவது பிரதமராக கோ சோக் டாங் பதவி ஏற்றார்.

இந்தோனேசியத் தலைநகர் ஜாகர்த்தாவில் 1992ல் நடந்த 'ஆசன்' மாநாட்டில் கலந்து கொண்ட நம் பிரதமர் பி.வி. நரசிம்மராவ் சிங்கப்பூர் பிரதமர் கோ. சோக். டாங்குடன் தொழில்நுணுக்கத் தகவல் பூங்கா அமைப்பதுபற்றிப் பேசினார். சிங்கப்பூர் இத்தகைய பூங்காக்களைத் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் அமைக்க இசைந்தது. இதன்படி கர்நாடக அரசு, டாடா தொழில் நிறுவனம் உதவ சிங்கப்பூர், பெங்களூருக்கருகே இப்பூங்காவை அமைத்துத்தர இசைந்தது.

கர்நாடக அரசு 24 ஹெக்டேர் நிலத்தை இதற்காக அளித்தது. இந்தப் பூங்காவில் எல்லாத் தொழில்களைப் பற்றிய விவரங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவை பற்றிய ஆய்வு, பரிசோதனை, விரிவு பயிற்சி, வியாபாரச் சந்தை மற்றும் மனம் மகிழும் அம்சங்களும், இங்கு மாணவர்களுக்கும் சிறு தொழில் ஆரம்பிப்போருக்கும் கிடைக்கின்றன. கம்ப்யூடர், மின் அணு சாதனங்கள், தொலைத் தொடர்பு சாதனங்கள் ஆகியவற்றில் பயிற்சி பெற்று 20000 பேர்களுக்கு வேலை வாய்ப்பும் கிடைக்கும். இதனால் நம் இளைஞர்கள் அயல் நாடுகளுக்குப் போய் வேலை தேடுவதைத் தவிர்க்கவும் முடிகிறது.





# எதிர் நீச்சல்

மணலூரில் மாலதி பணக்காரி. அவள் தன் சிறு வயதில் தன் தாய் தந்தையரை இழந்ததால் அவளது தாய் மாமன் அவளைப் பாது காத்து வளர்ப்பதாகக் கூறிக் கொண்டு தன் குடும்பத்தோடு அவளது வீட்டிற்கு வந்து விட் டான். வீட்டு நிர்வாகம் அவன் கீழ் இருந்தது. அவனது மனை வியோ தன் மகன் மாதவனுக்கு மாலதியைக் கல்யாணம் செய்து வைக்கப் போவதாக ஊராரிடத் தில் கூறி வந்தாள்.

மாதவனோ படிப்பற்றவன். கெட்ட சகவாசமும் எல்லா துர் குணங்களும் கொண்டவன். பார்ப்பதற்கும் விகாரமாகவும் இருந்தான். இப்படிப்பட்டவனை மணக்க மாலதி விரும்பவில்லை. மேலும் அவள் தன் மாமனின் உள் நோக்கம் என்ன என்று புரிந்து கொண்டுவிட்டாள். தன் மாமன் அவன் மகனைத் தனக்குக் கல் யாணம் செய்து வைத்துச் சொத்தை அபகரிக்க நினைக்கிறான் என அவள் தெரிந்து கொண்டாள். அதனால்தான் மாமனின் குடும் பத்தை எப்படி வீட்டைவிட்டு வெளியேற்றுவது என யோசிக்க லானாள். தன் மாமன் தன் சொத்தை அபகரிக்க முயல்வதை தடுக்க அவள் தான் ஒரு புத்திசாலியான நல்ல இளைஞனைத் தேர்ந் தெடுத்து அவனை மணந்து கொள் வது என்று தீர்மானித்துக் கொண் டாள்.

அதே ஊரில் சந்திரன் என்ற இளைஞன் ஆற்றங்கரை ஓரம் வசித்து வந்தான். அவன் ஏழை. ஆனால் புத்திசாலி. நற்குணங் கள் கொண்டவன். பார்க்கவும் அழகாக இருந்தான். அவன் பல

—கி. அருணா—



ரனுக்கும் அவளை மணந்து கொள்ள விருப்பமே. ஆனால் அதற்கு முன் அவன் நீச்சல் வீரன் என்ற பட்டம் பெற விரும்பி னான். எனவே அவன் அவளிடம் "நான் என் குருவிடம் அனுமதி பெற்று வருகிறேன்" எனக் கூறித் தன் குருவான ஆத்மானந்தரைக் காணச் சென்றான்.

ஆத்மானந்தர் மாலதியை நன்கு அறிவார். எனவே சந்திரன் கூறி யதைக் கேட்டுவிட்டு "நீ நீச்சல் வீரன் என்ற பட்டம் பெறத் துடிக் கிறாய். மணம் புரிந்து கொண்டு விட்டால் இதைப் பெற முடி யாதோ என பயப்படுகிறாய். எனவே நீ இந்தப் பட்டம் பெற சில யோசனைக்ளை மேலக் காவேரி என்ற ஊரிலுள்ள முகுந்த னிடம் கேள். அப்போது அந்தப் பட்டம் பெற வழி உனக்குத் தெரி யும். நீயும் மாலதியை மணந்த பிறகுப் போட்டியில் கலந்து பட்டம் பெற்றுவிடலாம்" என் றார்.

நீச்சல் போட்டிகளில் கலந்து கொண்டு அவற்றில் முதலாவ தாக வந்து பரிசுகளும் பெற்று வந்தான்.

மாலதி அவனை மணந்து கொள்ளத் தீர்மானித்தாள். ஏனெ னில் அவனை அவள் சிறு வயதி லிருந்தே அறிவாள். எனவே தன் பிரச்னையை அவனிடம் கூறினால் அவன் தன்னை மணக்கச் சம் மதிப்பான் என மாலதி உறுதியாக நம்பினாள்.

அவள் சந்திரனைக் கண்டு தன் நிலைமையைக் கூறித் தன்னை மணந்து கொண்டு பிரச்சினையை அவன்தான் தீர்த்து வைக்க வேண் டும் என வேண்டினாள். சந்தி

சந்திரனும் மேலக் காவேரிக் குப் போய் முகுந்தனின் வீட்டை அடைந்தான். அப்போது அவன் வீட்டில் இல்லை. அவன் தன் நோயாளியான தன் தந்தைக்கு வைத்தியம் செய்ய வைத்தியரை அழைத்து வரப் போயிருந்தான். அவனது தாயோ அவன் எப போது வருவான் என்று காத்துக்

கொண்டிருந்தாள். ஏனெனில் மறு நாள் அவளது பேத்தியைப் பெண் பார்க்க சிலர் வந்து கொண்டிருந் தார்கள்.

சந்திரனும் "வீட்டில் வயதான வர் படுத்திருக்கும்போது இந்தப் பெண் பார்க்கும் ஏற்பாடு எதற்கு?" என்று கேட்டான்.

கிழவியோ "பத்துபேர் இருக் கும் இந்த வீட்டில் தினமும் யாராவது ஒருவர் ஏதாவது நோய் எனப் படுத்துவிடுவார். அதற் காக நடக்க வேண்டியதெல்லாம் நின்று போய்விட வேண்டுமா என்ன? எதெது எப்போது எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடந்துதானாக வேண்டும்"என்று கூறினாள்.

அதைக் கேட்ட சந்திரன் சற்று யோசித்து நின்றபோது ஒரு பயில் வான் அங்கே வந்து "எங்கே அந்தப் புயல் முகுந்தன்? நீங்கள் யார்? நீங்களும் முகுந்தனுக்குப் பணம் கடன் கொடுத்தவரா? அதை வசூலிக்க வந்திருக்கிறீர் களா?" என்று சந்திரனைப் பார்த் துக் கேட்டான்.

அதற்கு என்ன பதில் சொல் வது என்று சந்திரன் யோசிக்க லானான். அப்போது அந்த பயில் வான் "என்ன யோசிக்கிறீர்கள்? உங்கள் பணம் உங்களுக்குக் கிடைக்காது. ஆற்றோடு போய் விட்டதாக நினைத்துக் கொள்



ளுங்கள். இந்த உதவகரை முகுந் தன் எங்கே திருப்பிக் கொடுக்கப் போகிறான்?" என்று கூறிவிட்டுப் போய்விட்டான்.

இதைக் கொண்டு முகுந்த னுக்கு ஊரில் நல்ல பெயர் இல்லை என்று சந்திரனுக்குத் தெரிந்தது. ஆனாலும் அவன் அது பற்றி அறிய ஊருக்குள் சென் றான். மளிகைக் கடைக்காரன், பால்க்காரன் ஏன், சலவைக் காரன் என்று யாரை விசாரித் தாலும் அவர்கள் முகுந்தன் தமக் குப் பணம் கொடுக்க வேண்டும் என்றே கூறினார்கள். ஊர் மணிய காரரோ, முகுந்தன் ஒரேயடியா கப் பொய் பேசுபவன் என்றார்.




இப்படிப்பட்டவனிடமா குரு தன்னை அனுப்பி இருக்கிறார் என்று எண்ணிச் சந்திரன் ஆச்சரியப்பட்டான். ஆனாலும் ஆத்மானந்தர் கூறினாரே என்பதற்காக முகுந்தனைப் பார்த்துவிட்டுப் போவது என அவன் எண்ணிக் கொண்டான். அவன் யோசித்தவாறே ஊருக்கு வெளியே ஏரிக் கரை மீது நடக்கையில் இருவர் அவனை நோக்கி வந்தனர். அவர்களில் ஒருவன் "ஐயா! நாங்கள் ஒருவருக்கு வைத்தியம் செய்ய ஒரு மரத்துண்டை வெட்டி ஒரு வண்டியில் ஏற்றிக் கொண்டு வந்தோம். எங்கள் வண்டி குடை சாய்ந்து மரத்துண்டு கீழே விழுந்துவிட்டது. அதை எங்கள் வீட்டு வரை எடுத்து வந்தால் ஒரு உயிரைக் காப்பாற்றிய புண்ணியம் உங்களுக்குக் கிடைக்கும்" என்றான்.

அவன்தான் முகுந்தன் என ஊகித்த சந்திரன் அவர்களுக்கு உதவ மரத்துண்டை தூக்கிக் கொண்டு நடந்தான். அப்போது சற்று முன் அவன் பார்த்த பயில்வான் எதிரே வந்தான். அவன் முகுந்தனைப் பார்த்ததுமே பணிவுடன் "நாளை பெண் பார்க்க வருகிறார்களாமே. நிறைய வேலை இருக்கும். என்ன செய்ய வேண்டுமோ சொல். நான் வந்து செய்கிறேன்" என்று கூறி வணங்கிவிட்டுப் போனான்.

இதைக் கண்ட சந்திரன் ஆச்சரியப்பட்டான். வழியில் போகையில் மறுநாள் விசேஷத்திற்கு மளிகை சாமான்கள் அனுப்புவதாக மளிகைக் கடைக்காரனும், பால் அதிகம் கொண்டு வருவதாகப் பால்காரனும் வெளுத்த துணிகளை உடனேயே கொண்டு வந்து கொடுப்பதாகச் சலவைத் தொழிலாளியும் கூறியது கேட்டு சந்திரன் மேலும் ஆச்சரியப்பட்டான். முகுந்தனும் அவர்கள் எல்லோரையும் மறுநாள் வீட்டில் நடக்கப்போகும் விசேஷத்திற்கு வருகை தருமாறு வேண்டிக் கொண்டான்.

கிராம மணியகாரரும் முகுந்

தனைக் கண்டு "என்ன முகுந்தா? உன் மகளைப் பெண் பார்க்க வருகிறார்களாமே. ஆயிரம் பொய் சொல்லியாவது கல்யாணத்தை முடி என்று பெரியவர்கள் சொல் கிறார்கள். நீ இந்த சம்மந்தத்தை விட்டுவிடாதே. என்ன உதவி வேண்டுமானாலும் நான் செய் கிறேன். அவர்கள் என்ன கேட்டா லும் கொடுப்பதாகச் சொல்லி விடு. என்று கூறிவிட்டுப் போனார்.

இதை எல்லாம் கண்டு சந்தி ரன் ஆச்சரியப்பட்டவாறே முகுந்த னின் வீட்டை அடைந்தான். அங்கே அவன் மரத் துண்டுகளை இறக்கி வைத்துவிட்டு முகுந்த னிடம் "உங்களை நேரில் கண்ட தும் ஊரார் உங்களை வெகுவா கப் புகழ்கிறார்கள். ஆனால் உங்கள் பின்னாலேயே உங்களை இகழ்கிறார்களே, இது ஏன்?" என்று கேட்டான்.

முகுந்தனும் "நாளை வரை என் வீட்டில் தங்குங்கள். பெண் பார்க்கும் நிகழ்ச்சி எல்லாம் முடிந்த பின் சாவகாசமாகப் பேச லாம்" என்றான். சந்திரனும் அவனது வேண்டுகோளை ஏற்று மறுநாள் விசேஷத்தில் கலந்து கொண்டான். அன்று ஊரார் எல்லோரும் வந்து முகுந்தனுக்கு உதவினார்கள். அவர்களை எல் லாம் முகுந்தன் தக்கபடி கௌர



வித்தான்.

மாப்பிள்ளை வீட்டாருக்கும் பெண் பிடித்துப் போகவே கல் யாணம் நிச்சயம் செய்யப்பட் டது. அப்போது முகுந்தனின் தா யார் அவனிடம் "நீ எல்லாம் செய்வதாக மாப்பிள்ளை வீட்டா ரிடம் சொல்லிவிட்டாயே எப்ப டிச் செய்யப் போகிறாயோ!" எனக் கேட்டாள். முகுந்தனும் சற்றும் கவலைப்படாமல் "உல கில் யாருக்குத்தான் கஷ்டம் இல்லை? நான் எப்படியாவது என் மகளின் திருமணத்தை நடத்தி விடு கிறேன். கவலைப்படாதே" என் றான். அதன் பின் சந்திரன் முகுந்த னைத் தனியே அழைத்துப்போய்

"இப்போது நான் கேட்ட விளக்கத்தைத் தருவீர்களா?" என்று கேட்டான்.

முகுந்தனும் "ஊரார் என்னைத் தூற்றுவது எனக்கு மிக நன்றாகத் தெரியும். என்னிடம் பணம் இல்லை. நான் மற்றவர்களை நம்பி வாழ வேண்டியுள்ளது. அதனால் அவர்கள் என்னை என்ன சொன்னாலும் அதுபற்றி நான் கவலைப்படுவதே இல்லை. நான் யாரிடமும் வம்புக்குப் போக மாட்டேன். எனக்கு ஏதாவது தேவைப்பட்டாலே ஒருவரை அணுகுவேன். யாருக்கும் எந்தக் கெடுதல் செய்யாமலும் யாரைப் பற்றியும் எதுவும் குறை கூறாமலும் இருப்பதால் என்னை எல்லோரும் விரும்புகிறார்கள்" என்றான்.

சந்திரன் அப்போது "என் குருநாதர் ஆத்மானந்தர் சொல்லித்தான் உங்களிடம் நீச்சல் பற்றி அறிய வந்தேன். நான் நீச்சல் வீரன் பட்டம் பெற விரும்புகிறேன்" என்றான். முகுந்தனும் "எனக்கு ஆத்மானந்தரையும் தெரியாது. நீச்சலும் தெரியாது. சிறு வயது முதல் குடும்பத்திற்காகக் கஷ்டப்பட்டு வாழ்க்கையில் எதிர் நீச்சல்தான் போட்டு வருகிறேன். இதுதான் கடலில் இறங்காமல் நான் போடும் நீச்சல்" என்றான்.

சந்திரனுக்கு அப்போதுதான் தன் குருநாதர் எப்படிப்பட்ட நீச்சலைக் கற்றுக் கொள்ளச் சொன்னார் என்பது தெரிந்தது. அவன் முகுந்தனிடம் விடை பெற்றுக் கொண்டு தன் ஊருக்கு வந்தான். அவன் மாலதியை மணம் புரிந்து கொண்டு பிரச்சினைகளைச் சமாளித்து வெற்றிநடை போட்டு அவளோடு சுகமாக வாழ்ந்து வரலானான்.






## 12

*[நாகபுரி அரண்மனையில் திருடுபோன அதிசய மலர்கள் கடற்கரையில் ஒரு படகில் இருந்தன. தளபதி நாகசிம்மன் சில வீரர்களுடன் உத்தமனுக்குத் துணையாகப் படகுகளில் சென்றான். கடலில் கொஞ்ச தூரம் போனதும் நாகசிம்மன் உத்தமனைக் கடலில் தள்ளிவிட்டு அதிசய மலர்களைக் கைப்பற்றிக் கொண்டான். உத்தமன் கடற்கரையை நோக்கித் தன் படகைச் செலுத்தலானான். அப்போது—]*

உத்தமன் மாணிக்கபுரியை விட்டுப் போய் ஒரு வாரமாகி விட்டது. அவனைப் பற்றி எவ்விதத் தகவலும் இல்லையே என்று அவன் தங்கை நளினியும் அரசகுமாரி பிரியம்வதையும் கவலைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். ராட்சஸ மிருகத்தினால் அவனுக்கு ஆபத்து நேரிட்டுவிட்டதோ என்று நளினி அஞ்சினாள். அப்போது பிரியம்வதை அதெல்லாம் ஒன்றும் இராது என்றும் அண்ணா வெற்றியுடன் திரும்பி வருவார் என்றும் ஆறுதல் கூறினாள்.

ஆனாலும் நளினியின் மனம் தவியாய்த் தவித்தது. நாட்கள் கழிவது அவளுக்குப் பெரும்பாடாகவே இருந்தது. அவளுக்கு இரவு வேளைகளில் சரியாகத் தூக்கமே வரவில்லை. ஒரு நாளிரவு அவள்



திடீரென்று கண் விழித்து உட்கார்ந்து "ஆ! அண்ணா!!" என்று உரக்கக் கூவினாள்.

அடுத்த அறையில் படுத்திருந்த இளவரசி எழுந்து ஓடி வந்து "உன் அண்ணா வந்துவிட்டாரா?" என்று கேட்டாள். நளினியும் "இல்லை அவர் நடுக்கடலில் விழுந்துவிட்டதுபோல ஒரு கெட்ட கனாக் கண்டேன்." என்று கண்களை கசக்கிக் கொண்டே கூறினாள்.

அதுகேட்டு இளவரசி 'ஓ! கனவுதானே! கவலைப்படாதே. யாராலும் உன் அண்ணாவைக் கடலில் தள்ளிவிட முடியாது. ராட்சஸ மிருகத்தைக விரட்டத் தானே போனார். அந்த வேலையை முடித்த பிறகுதான் வருவார்" என்று கூறினாள்.

உத்தமன் தன் படகைக் கரையை நோக்கிச் செலுத்தலானான். தன்னைக் கடலில் தள்ளிய நாகசிம்மனும் அவனது ஆட்களும் படகுகளில் எங்காவது போய்க் கொண்டிருக்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தான். எங்கும் தென்படவில்லை. அவனது படகு கடற்கரையை அணுகலாயிற்று. அப்போது ஒரு பெரிய அலை வந்து அவனது படகைக் கடற்கரையில் தூக்கி எறிந்தது.

உத்தமன் கரையில் ஓரிடத்தில் விழுந்தான். நல்ல வேளையாக உடலில் காயம் எதுவும் ஏற்படவில்லை. அவனது படகும் சற்று தூரத்தில்தான் விழுந்து கிடந்தது. உத்தமன் எழுந்து போய்ப் படகை இழுத்து பத்திரமான ஒரு இடத்தில் கட்டினான்.

அங்கிருந்து அவன் மலைவாசிகளின் குடியிருப்புள்ள இடத்திற்குச் சென்றான். அங்கு அவன் காயம்புவின் வீட்டை அடைந்து கதவைத் தட்டினான். சற்று நேரத்தில் கதவைத் திறந்து கொண்டு காயாம்புவின் மகள் சித்திராதான் நின்றாள்.

அவள் உத்தமனைக் கண்டு ஆச்சரியப்பட்டவாறே "நீயா? என்ன நடந்துவிட்டது?" என்று

கேட்டாள். உத்தமன் அதற்கு எவ்வித பதிலும் கூறாமல் "காயாம்பு எங்கே?" என்று கேட்டான். சித்திராவும் "அவர் சேனாதிபதியைக் காணச் சென்றிருக்கிறார்" என்றாள்.

அதுகேட்டு உத்தமன் சற்றும் தாமதியாமல் தலைநகருக்கு ஓடினான். அவன் தலைநகரில் சேனாதிபதியின் மாளிகையை அடைந்த போது அங்கு சேனாதிபதி துர்ஜயனும் காயாம்புவும் மிகவும் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

உத்தமனை அவர்கள் கண்டதும் ஆவலுடன் எழுந்தோடி வந்து "உத்தமா! என்ன இது? நாகசிம்மன் என்ன ஆனான்?" என்று கேட்டார்கள். உத்தமனும் "என்னை நாகசிம்மன் படகிலிருந்து கடலில் தள்ளிவிட்டு எங்கோ போய் விட்டான். அவன் என்ன ஆனான் என்று எனக்குத் தெரியாது" என்றான்.

காயாம்புவும் "ராட்சஸ மிருகம் வந்ததா? தாக்கியதா?" என்று கேட்டான். அதற்கு உத்தமன் "ராட்சஸ மிருகம் தாக்கவில்லை. ஆனால் தாக்கியது நாகசிம்மன் என்ற மிருகம்தான்" என்றான். அவர்கள் நடந்ததை விவரமாகக் கூறும்படிக் கேட்கவே உத்தமனும் விரிவாக எல்லாவற்றையும் கூறினான்.

எல்லாவற்றையும் கேட்டபின்



காயாம்பு "நல்ல வேளையாக நீ உயிர்தப்பி வந்தாயே, அதுவே போதும். ஆனால் அதிசய மலர்களை எடுத்துப்போன நாகசிம்மன் அவற்றைக் கொண்டு என்ன செய்யப் போகிறானோ இனி என்ன விபரீதம் நடக்கப் போகிறதோ" எனக் கூறிப் பெருமூச்சு விட்டான்.

அதைக் கேட்ட தூர்ஜெயன் "நாகசிம்மன் பேராசை பிடித்தவன் என்பது நமக்குத் தெரிந்ததே. அவன் எதையும் செய்யக் கூடியவன். அவன் மலரைக் காட்டி ராட்சஸ மிருகத்தைத் தன்னோடு அழைத்து வந்து நம் ஊரைத் தாக்கி நாசப்படுத்தினாலும் படுத்



துவான்" என்றான் கோபத்தோடு.

அப்போது உத்தமன் "அந்த ராட்சஸ மிருகத்தை நாகசிம்மன் பார்த்ததே இல்லை. அவ்வளவு பெரிய மிருகம் குறுகிய பாறை வழியே வந்து நாகபுரத்தைத் தாக்க முடியாது" என்றான். அது கேட்டு சேனாதிபதி "அப்படியானால் கவலை இல்லை. நாம் இந்த விஷயத்தை இப்போதே மன்னரிடம் தெரிவிக்க வேண்டும். அரச குடும்பத்தை முதலில் காக்க வேண்டும்" என்று கூறி உடனே கிளம்பினான். காயாம்புவும் உத்தமனும் அவன் பின்னால் சென்றனர்.

மன்னன் அவர்களைப் பார்த்ததும் "ஆ! உத்தமனா? நீ இன்னமும் புறப்படவில்லையா?" என்று கேட்டான். பிறகு சேனாதிபதியிடம் "நாகசிம்மன் என்னவானான்? எங்கேயாவது ஓடிப் போய் விட்டானா?" என்று மன்னன் கேட்டான்.

சேனாதிபதியும் "இல்லை அரசே! இதற்கிடையில் என்னென்னவோ நடந்துவிட்டது" எனக் கூறி உத்தமன் சொன்னதை எல்லாம் ஒன்றுவிடாமல் மன்னனிடம் தெரிவித்தான். அப்போது மன்னன் "துர்ஜெயா! என் குடும்பத்தைப் பற்றிக் கவலைப்படாதே. மக்களின் பாதுகாப்பைத்தான் முதலில் பார்க்க வேண்டும். நாம் சற்றும் தாமதிக்காமல் இப்போதே கடற்கரைக்குச் செல்வோம். வீரர்கள் இரு கைகளிலும் தீவட்டிகளை எடுத்து வரட்டும். ராட்சஸ மிருகம் வெளிச்சத்தைக் கண்டு பயப்படும் என்று உத்தமன் கூறி இருக்கிறான். அதனால் தீவட்டிகள் நம் கைகளில் உள்ளவரை ராட்சஸ மிருகம் நம்மை ஒன்றும் செய்யாது. காயாம்பூ! நீ உத்தமனை அழைத்துக் கொண்டு கடற்கரைக்கு முன்னதாகப் போ. நாங்களும் பின்னாலேயே வந்து சேர்கிறோம். பிறகு என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி யோசித்து செய்ய வேண்டியதைச் செய்

வோம்'' என்றான்.

காயாம்பு உத்தமனோடு தன் குடியிருப்பிற்குப் போய்த் தன் மனைவியிடம் தாம் கடற்கரைக் குப் போவதாகச் சொன்னான். அதன் பின் இருவரும் கடற்கரைக்கு விரைந்து சென்றார்கள். மலை வாசிகள் அவர்கள் போவதை ஆச்சரியத்தோடு பார்த்து நின் றார்கள்.

இருவரும் கடற்கரையை அடைந் தனர். அலை ஓசையைத் தவிர வேறு எந்த சத்தமும் அங்கு கேட்கவில்லை. அவர்கள் ஒரு உயரமான பாறையின் மீது ஏறி படகு ஏதாவது தென்படுகிறதா என்று பார்த்தார்கள். எதுவும் அவர்களுக்குத் தென்படவில்லை. வெகு நேரத்திற்குப் பின் கடலி லிருந்து பேச்சுக்குரல் கேட்டது. முதலில் அது தெளிவாக இருக் கவில்லை. போகப்போக அது நன்றாகக் கேட்டது.

அதைக் கேட்ட காயாம்பு ''இது நாகசிம்மனின் குரலைப் போல இருக்கிறதே.'' என்றான். அப்போது கடலையே பார்த்துக் கொண்டிருந்த உத்தமன் ''அதோ ராட்சஸ மிருகம் என்று கூறி னான். காயாம்புவும் உத்தமன் காட்டிய இடத்தைப் பார்க்கவே அங்கு மிகப் பெரிய கரிய உருவம் மலைபோல இருந்தது. அது மெது வாக நகர்ந்து வந்து கொண்டிருந் தது.



காயாம்புவும் ''மலைபோல இருக்கிறதே இந்த ராட்சஸ மிரு கம். ஆனால் அது படகுகளைப் பின் தொடர்ந்து வருகிறது'' என் றான். உத்தமனும் ''அது ராட்சஸ மிருகம்தான். அது படகுகளை முந்திக் கொண்டு வராமல் பின்னா லேயே வந்து பாறைகளுக்கு இடையே உள்ள குறுகிய சந்தி னுள் நுழைந்து வர முடியாது என்றே நினைக்கிறேன்'' என்றான்.

காயாம்புவும் ''நீ சொல்வதும் சரியாக இருக்கலாம். என்ன நடக் கும் என்று பொறுத்திருந்து பார்ப் போம். அதற்குள் மன்னரும் சேனாதிபதியும் வந்துவிடுவார்



கள்" என்றான். "அதோ அவர்களும் வந்துவிட்டார்கள்." என்றான் உத்தமன். காயாம்புவும் திரும்பிப் பார்த்தான்.

வீரர்கள் தீவட்டிகளைப் பிடித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். அந்த வெளிச்சத்தில் மன்னனையும் சேனாதிபதி துர்ஜெயனையும் நன்கு காண முடிந்தது.

சற்று நேரத்தில் அவர்களும் உத்தமன் இருந்த பாறைமீது ஏறி வந்து நின்றார்கள். தீவட்டி வெளிச்சம் கடலில் பிரதிபலித்தது. அந்த வெளிச்சத்தில் இரு படகுகள் கரையை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஒரு படகில் நின்ற மனிதன் கையை ஆட்டி ஏதோ கூறிக் கொண்டிருந்தான். படகு செல்லச் செல்ல ராட்சஸ மிருகம் அதன் பின் சென்றது.

ராட்சஸ மிருகம் படகைப் பிடிக்க முயல்வதையும் படகு அதற்கு அகப்படாமல் வந்து கொண்டிருப்பதையும் அவர்கள் கண்டார்கள். படகு அங்கும் இங்கும் ஆடிக் கொண்டு வரவே அதில் நின்றவன் தட்டுத்தடுமாறி அதனுள் விழுந்தான்.

அப்போது சேனாதிபதி "தீவட்டிகளை குறிபார்த்து ராட்சஸ மிருகத்தின்மீது தொடர்ந்து எறிந்து கொண்டே இருங்கள்" என்று கட்டளை இட்டான். வீரர்களும் அம்புகளை எய்வது போலத் தீவட்டிகளை ராட்சஸ மிருகத்தின் மீது எறியலானார்கள்.

சில தீவட்டிகள் கடலிலும் சில படகுகளிலும் விழுந்தன. பெரும்பாலானவை ராட்சஸ மிருகத்தின் மேல் விழுந்து அதன் உடலை காயப்படுத்தின. வெளிச்சத்தைத் தாங்க முடியாமல் ராட்சஸ மிருகம் ஒரு கையால் தன் கண்களை மூடிக் கொண்டு மற்ற கையால் படகின் ஒரு விளிம்பைப் பிடிக்கலாயிற்று.

அதன் மீது மேலும் சில தீவட்டிகள் வந்து விழவே அது வலி பொறுக்க முடியாமல் குதித்துப் படகுகளைக் கவிழ்த்துவிட்டது.

படகில் இருந்த அதிசய மலர்கள் கடலில் விழுந்து நாலாபுறமும் சிதறி மிதந்தன. அவற்றைப் பிடிக்க ராட்சஸ மிருகம் முயன்று கொண்டிருந்தது. அதன் பிடிப் பில் மறு படகிலிருந்து விழுந்த வீரர்களில் சிலரும் சிக்கி மாண் டனர். வேறு சில வீரர்களை அது கரையில் தூக்கி எறிந்தது. கரை யில் நின்ற வீரர்களோ அம்மிரு கத்தின் மீது தீவட்டிகளை எறிந்த வண்ணம் இருந்தனர். அதனால் அதன் உடலில் நெருப்புப் பற்றி அது எரிந்து கருகி சாம்பலாகி விட்டது.

அந்த பயங்கரக் காட்சியைக் கண்ட மன்னன் "அப்பாடா! ராட் சஸ மிருகம் ஒழிந்தது." எனக் கூறி மகிழ்ந்தான். அதற்குள் கடலிலிருந்து சில வீரர்கள் நீந் திக் கரைக்கு வந்தார்கள். அவர் களும் ராட்சஸ மிருகம் எரிந்து சாம்பலாய்ப் போனதை உறுதி செய்தார்கள்.

சேனாதிபதியும் "இனி நமக்கு இங்கு வேலை இல்லை. சில வீரர்களை மட்டும் இங்கே விட்டு விட்டு நாம் தலைநகருக்குச் செல்வோம்" என்றான். அப் போது காயாம்பு "நாகசிம்மன் விஷயம் என்ன?" என்று கேட் டான்.

உத்தமன் அப்போது "அதை நான் கவனித்துக் கொள்கிறேன். இன்றிரவு நான் வீரர்களோடு இருந்துவிட்டு மேலும் விவரங் களைத் தெரிந்து கொண்டு வரு கிறேன். நாளை காலையில் தங் களைக் கண்டபின் நான் எப் போது மாணிக்க புரிக்குச் செல்ல வேண்டும் என்பதை முடிவு செய்ய லாம்" என்று மன்னனிடம் கூறி னான்.

மன்னனும் சேனாதிபதியும் காயாம்புவும் வீரர்களோடு சென்று விடவே உத்தமன் சில வீரர் களுடன் அங்கேயே இருந்தான்.

(அடுத்த இதழில் முடியும்)





# சரியாகக் கேட்டான்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்தப் பயங்கர நடுநிசியில் நீ இப்படி விடாப்பிடியாக ஏன் முயல்கிறாய்? உன் தாய் தந்தையருக்கு ஏதாவது வாக்குக் கொடுத்துவிட்டு உன் மனைவி மக்களைப் பற்றிக்கூடக் கவலைப் படாமல் அதை நிறைவேற்றப் போகிறாயா? இதனால் உன் மனைவி மக்கள்தான் கஷ்டப்படுவார்கள். இதை விளக்க உனக்கு ஜெயபாலன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



வெகு காலத்திற்கு முன் ஜெய புரத்தை ஜெயபாலன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் கிழவனாகி நாளுக்கு நாள் உடல் நலம் இழந்து போகவே இன்னும் சில நாட்களில் தான் இறந்து போவான் என்று அவனுக்குத் தெரிந்து போயிற்று.

அதனால் அவன் தன் மகன் வீரசிம்மனை அழைத்து ''மகனே! நான் இறந்து போய்விடுவேன். ஆனால் என் மனமோ மேலும் கொஞ்ச காலம் வாழ்ந்து பூலோக சுகங்களை அனுபவிக்க விரும்பு கிறது. நான் இறந்துவிட்டால் என் உடலை எரித்துவிடாதே. அதனை தைலம் பூசி பத்திரமாக ஒரு பெட்டிக்குள் வை. என்றா வது ஒரு மகான் வந்து அந்த உட லுக்கு உயிர் கொடுப்பார். அதன் பிறகு நான் சில ஆண்டுகள் சுக மாக வாழ்வேன். என் விருப் பத்தை நிறைவேற்று'' என்றான்.

வீரசிம்மனும் அவ்வாறே செய்வ தாக ஒப்புக் கொண்டான். இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் ஜெய பாலன் இறந்து போனதும் வீர சிம்மன் தன் தந்தையின் உடலைப் பாதுகாக்க அதன் உடலில் தைலம் தடவி அதனை சந்தன மரப் பெட்டி யில் பத்திரமாக வைத்தான்.

வீரசிம்மன் மன்னனானதும் தீரபுர மன்னனின் மகள் திலோத்த மையை மணந்து கொண்டான். அவள் அழகி. நற்குணவதி. சில நாட்களானபின் திலோத்தமை தாய்மை எய்தினாள். ஆஸ்தான சோதிடர் அவளது ஜாதகத்தைப் பார்த்துவிட்டு ''ராணி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பாள். ஆனால் அவளுக்கு சர்ப்ப கண் டம் உள்ளது'' என்றார்.

அதைக் கேட்ட மன்னன் ''அப்படி யானால் இப்போதே என் நாட்டி லுள்ள பாம்புகளை எல்லாம் அழிக்க ஏற்பாடு செய்கிறேன். ஒவ்வொரு வீட்டிலும் கீரிப் பிள்ளை வளர்க்க வேண்டும் என் றும் உத்தரவு இடுகிறேன்'' என் றான். அப்போது முதல் அர சாங்க வீரர்கள் பாம்புகளைத்

தேடிக் கண்டுபிடித்துக் கொல்ல லானார்கள்.

இது போதாதென்று வீரசிம்மன் ஒரு கழுகை கிளிப் பிள்ளையைப் போல வளர்த்து வரலானான். அது எப்போதும் ராணியின் தோளின் மீதே அமர்ந்திருந்தது. இப்படி எல்லா ஏற்பாடுகளையும் செய்ததால் தான் திலோத்தமைக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லை.

ஒரு பௌர்ணமி இரவில் ராணி மன்னனிடம் "நிலவு பால் போலக் காய்ந்து கொண்டிருக்கிறது. நாம் இருவரும் அரண்மனைப் பூங்காவில் அமர்ந்து சற்று நேரம் பேசிக் கொண்டிருக்கலாமா?" என்று கேட்டாள். வீரசிம்மனும் அதற்கு இணங்கி அவளை அழைத்துக் கொண்டு பூங்காவிற்குச் சென்றான்.

அப்போது ராணியின் தோளின் மீது இருந்த கழுகு திடீரென அருகிலுள்ள ஒரு மரத்தை நோக்கிப் பாய்ந்து சென்றது. அது அங்கே இருந்த ஒரு நல்ல பாம்பைத் தன் கால்களில் பற்றிக் கொண்டு உயரப் பறந்தது. ஆனால் அந்தப் பாம்பு நெளிந்து அதன் பிடியிலிருந்து தப்பி உயரத்திலிருந்து நேராக ராணியின் தோளின்மீது விழுந்து திலோத்தமையைத் தீண்டிவிட்டு ஓடியது.

ராணி ஆவென அலறித் துடி



துடித்தாள். விஷம் விர்ரென்று பரவி வைத்தியர் வருவதற்குள் அவளது உயிர் போய்விட்டது. திலோத்தமையின் மரணம் வீரசிம்மனைக் கலங்க வைத்தது. அவன் அவளது அழகிய உடலை எரிக்க விரும்பவில்லை. அதனால் அவன் தன் தந்தையின் உடலைப் பத்திரப் படுத்தி வைத்திருந்ததுபோல திலோத்தமையின் உடலுக்கும் தைலம் பூசி சந்தனப் பெட்டிக்குள் வைத்து மூடி பாதுகாத்து வந்தான்.

சில மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் இமயமலையிலிருந்து ஜெயபுரத்திற்கு ஒரு மகான் வந்தார். அவர் கடுந்தவம் புரிந்து அரிய சக்தி பெற்றவர். இதனை அறிந்த

வீரசிம்மன் அவரை தரிசித்து ஏதோ சொல்ல முயன்றான்.

ஆனால் அவனை இடைமறித்து அவர் "நீ என்ன சொல்லப் போகிறாய் என்பது எனக்குத் தெரியும். மரணம் என்பது இயற்கையின் நியதி. அதை மீறினால் நாசகரமான விளைவுகளே ஏற்படும். நீ உன் தந்தையின் உடலை எரிக்காமல் கோட்டைக்குள் பத்திரப் படுத்தி வைத்தாய். அதனால் தான் உன் குடும்பத்திற்கு ஆபத்து ஏற்பட்டது. பாம்பு கடித்து உன் மனைவியும் இறந்து போனாள். இது அகால மரணம். நீ இப்போதே உன் தந்தையின் உடலை தகனம் செய். உடனே உன் மனைவி உயிர் பெற்று எழுந்து வருவாள்" என்றார்.

வீரசிம்மன் சற்று யோசித்து விட்டு அவரை வணங்கி "சுவாமி! தங்களுக்கு அரிய சக்திகள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு உங்களால் இறந்தவர்களை உயிர்ப்பிக்க முடியாதா?" என்று கேட்டான்.

மகானும் புன்னகை புரிந்தவாறே "என் தவ சக்தி முழுவதையும் நான் பயன்படுத்தினால் ஒரே ஒரு உடலுக்குத்தான் உயிரளிக்க முடியும். உன் தந்தை, உன் மனைவி ஆகிய இருவரையும் உயிர்ப்பிக்க முடியாது. இவர்களில் ஒருவரை உயிர் பெற்று வரச் செய்கிறேன். இவர்களில் யாருக்கு உயிர் கொடுக்க வேண்டும் என்று



நீ விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

வீரசிம்மனும் சற்று யோசித்து ''என் தந்தையை உயிர்பெற்று வரச் செய்யுங்கள்'' எனக் கூறினான். அது கேட்டு அந்த மகான் ''நீ மிகச் சிறந்த அறிவாளி. ஆழ்ந்து யோசித்து இப்படிக் கேட்டதால் ஒரே சமயத்தில் நீ மூன்று பேர்களும் உயிர் பெற்று வரும்படி செய்துவிட்டாய்'' எனக் கூறி அவனை ஆசீர்வதித்து அவன் வேண்டியபடி செய்துவிட்டுச் சென்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! அந்த மகான் கூறியது ஒன்றுக்கொன்று முரண்பாடாக இல்லையா? அவர் தன் அரிய சக்திகளை எல்லாம் பயன்படுத்தினாலும் ஒருவரைத்தான் உயிர்ப்பிக்க முடியும் என்றாரே. ஆனால் வீரசிம்மன் தன் தந்தையை உயிர்ப்பித்து தரும்படி அவரிடம் கோரியபோது அவர் அவனை மிகச் சிறந்த அறிவாளி எனக் கூறி ஆழ்ந்து யோசித்து அவன் கேட்டதால் மூன்று உயிர்கள் பிழைத்து வரச் செய்தான் என்று கூறினாரே! இது ஒன்றுக்கொன்று முரண்பட்டதுதானே. மேலும் வீரசிம்மன் மட்டும் மகான் கூறியபடி அவனது தந்தையின் உடலை எரித்திருந்தாலே அவன் மனைவி திலோத்தமை உயிர் பெற்று வந்திருப்பாளே. தன் மனைவியை முதலில் உயிர்ப்பிக்க வேண்டும்



எனக் கேட்காமல் வீரசிம்மன் தன் கிழத் தந்தை உயிர் பெற்று வர வேண்டும் என்று கேட்டதும் சரியா? மேலும் இறந்தவர்கள் வீரசிம்மனின் தந்தையும் மனைவியும் ஆக இருவர்தாமே. ஆனால் மகானோ மூவர் பிழைத்தனர் என எப்படிக் கூறினார்? இக் கேள்விகளுக்கு எல்லாம் விடை தெரிந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலைவெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''வீரசிம்மன் தன் தந்தையை விரும்பிய அளவிற்குத் தன் மனைவியையும் நேசித்தான் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. அதனால்தான் அவன் தன் தந்தையின் உடலைப் பாதுகாத்து வந்ததுபோலத் தன் மனைவியின் உடலையும் பாதுகாத்து வந்தான். ஜெயபாலனின் உடலை எரிக்காமல் கோட்டைக்குள் வைத்ததால்தான் திலோத்தமைக்கு அகால மரணம் ஏற்பட்டதாக மகான் கூறினார். அதனால் ஜெயபாலன் உயிர்பெற்றுவிட்டால் அந்த தோஷம் போய்விடும். அதனால் திலோத்தமை உயிர்பெற்று விடுவாள் என்பதை வீரசிம்மன் புரிந்து கொண்டான். மகான் ஒரு உயிரைத்தான் உடலுக்குத் தர முடியும் என்றதால் வீரசிம்மன் தன் தந்தையை உயிர்ப்பித்து தோஷத்தைப் போக்கி தன் மனைவியும் உயிர்பெற்று வர வழி செய்தான். இருவர்தானே இறந்தனர். ஆனால் மகான் மூவர் பிழைத்தனர் என்றது வீரசிம்மனையும் அவள் மனைவியையும் அவள் வயிற்றில் வளர்ந்து வந்த சிசுவையும் குறித்துத்தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.






# அதிசாமர்த்தியசாலி!

ஒருஊரில் மாணிக்கம் என்ற அதிசாமர்த்தியசாலி இருந்தான். அவனுக்குப் பட்டணத்தில் வாழ வேண்டும் என்ற ஆசை இருந்தது. அதனால் தன் கிராமத்து வீட்டை அவன் விற்க முயன்றான். ஆனால் அதற்கு யாரும் ஐநூறு வராகன்களுக்கு மேல் கொடுக்கத் தயாராக இல்லை.

ஒருமுறை மாணிக்கம் பட்டணம் போகும்போது தர்மராஜன் என்பவனைக் கண்டான். தர்மராஜனும் தனக்கு அடிக்கடி மார்வலி வருவதாயும் அதைப் போக்க ஏதாவது ஒரு கிராமத்திற்குப் போய் வாழ்ந்து சுத்தமான காற்றை சுவாசித்தால் வலி வராது என வைத்தியர் கூறியதாகச் சொன்னான்.

அப்போது மாணிக்கம் "அப்படியானால் ஏதாவது ஒரு கிராமத்திற்குப் போவது தானே" என்று கூறவே தர்மராஜனும் "அதற்காகத் தான் பட்டணத்திற்கு பக்கமாக உள்ள ஏதாவது கிராமத்தில் விலைக்கு வீடு கிடைக்குமா என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

மாணிக்கமும் "எங்கள் ஊர் மிக நல்லது. சுத்தமான காற்றும் வீசும். நான்கூட என் வீட்டை விற்கலாமென்று இருக்கிறேன். விலை கூட அதிகம் இல்லை. ஆயிரத்து ஐநூறு வராகன்கள்தான்" என்றான்.

தர்மராஜனும் "உங்கள் ஊருக்கு வந்து அது எனக்குப் பிடித்திருந்தால் உங்கள் வீட்டையை விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்" என்றான். மாணிக்கமும் "எங்கள் ஊர் நல்ல ஆரோக்கியமானது. சுத்தமான காற்று எப்போதும் வீசும்.

கி. சுதா

என்னைப் பாருங்கள். இருபத்தைந்து வருடத்தில் என் ஊருக்கு வந்தேன். ஆரம்பத்தில் நடக்க முடியாமல் கட்டிலில் கிடந்த நான் எப்படி எழுந்து நடந்து ஆரோக்கியமாக இருக்கிறேன் என்று பாருங்கள்'' என்றான்.

தர்மராஜனும் மாணிக்கத்தோடு அவனது கிராமத்திற்குப் போனான். அந்த ஊர் அவனுக்கு மிகவும் பிடித்துவிடவே மாணிக்கத்தின் வீட்டை ஆயிரத்து ஐநூறு வராகன்கள் கொடுத்து வாங்கிக் கொண்டான்.

அந்த ஊரில் மாணிக்கத்தின் எதிரி ஏழுமலை என்பவன் இருந்தான். அவன் தர்மராஜனைக் கண்டு ''இந்த மாணிக்கம் என்னவெல்லாம் புளுகி ஐநூறு வராகன் கூடப் பெறாத இந்த வீட்டை உங்கள் தலையில் கட்டி விட்டான்?'' என்று கேட்டான்.

தர்மராஜனும் ''அவன் இந்த ஊருக்கு வந்தபோது நடக்க முடியாமல் கட்டிலில் கிடந்ததாகவும் பிறகு சரியாகிவிட்டதாகக் கூறினானே'' எனவே ஏழு மலையும் ''அவன் இந்த ஊருக்கு எங்கே இருந்து வந்தான்? அவன் பிறந்ததே இந்த ஊரில்தானே'' என்றான்.

அதுகேட்டு தர்மராஜன் மாணிக்கத்தைக் கூப்பிட்டு ''நீ பொய் ஏன் சொன்னாய்?'' எனவே அவனும் ''இல்லையே. நான் பிறந்தது இந்த ஊரே. அதனால் முதலில் வந்தது இந்த ஊரில் தானே. சிறு குழந்தையாக இருந்தபோது நடக்க முடியாமல் கட்டிலில் கிடந்தேன். வளர வளர நடந்தேன். இதைத்தான் நான் கூறினேன். இதில் பொய் என்பது இல்லை. இந்த ஊர் ஆரோக்கியமானது என்றேன். அதை நீங்களே நேரில் கண்டீர்கள். நான் ஆரோக்கியமாக இருக்கிறேன் என்பதும் உண்மை தானே'' என்றான்.

அப்போதுதான் மாணிக்கம் எவ்வளவு சாமர்த்தியசாலி என்பது தர்மராஜனுக்குப் புரிந்தது.



# அம்புலிமாமா அனுபந்தம்—65

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## அமைதிச் சின்னம்

பிரளயம் ஏற்பட்டபோது நோவா குடும்பம் ஒரு கப்பலில் சில பறவைகளுடனும் பிராணிகளுடனும் சென்றதாக பைபிள்கதை ஒன்று கூறுகிறது. நோவா தன் குடும்பம் தங்க நல்ல இடமாக பார்த்து வரும்படி ஒரு புறாவை அனுப்பினார். அது இரண்டு முறை பறந்து வந்தபோது அதன் அலகில் ஆலிவ் குச்சிகள் இருந்தன! அந்தப் பறவை பறந்து சென்ற திசையில் நோவா தன் கப்பலைச் செலுத்திச் சென்றான். அமைதியான வாழ்க்கையை நடத்த உதவிய புறாவை படமாக்கியபோது அதன் அலகில் ஆலிவ் குச்சியையும் அவன் வரைந்தான். இன்றும் அமைதிச் சின்னமாய்ப் புறாவை வரையும்போது இந்தக் குச்சியையும் வரைகிறார்கள். சமாதான அடையாளமாகப் புறாவைப் பறக்கவிடுகிறார்கள்.




இந்தப் புறாக்கள் குருவி போலச் சிறியவை. கழுத்தைச் சுற்றி வளையம் இருக்கும். இதன் உடல் சாம்பல் நிறத்தில் இருக்கும். இந்த வளையக் குருவிகளைவிட ஊதா நிறக் குருவிகள் சிறியவை. இவற்றின் இறக்கை களில் புள்ளிகள் இருக்கும்.

இக்குருவிகளில் சிவப்பு-ஊதா நிறக் குருவிகளே பெரியவை. இவற்றின் கழுத்தில் இரு புறங்களில் கருப்புப் புள்ளிகளும் நீலமும் சாம்பல் நிறமும் கலந்த வரிக் கோடுகளும் உள்ளன. நீண்ட வால் ஊதா அல்லது சாம்பல் நிறத்தில் இருக்கும். இவற்றைவிட முழுவதும் புள்ளிகளே உள்ள குருவி மிக அழகாக இருக்கும். இவற்றின் அடிவயறு சாம்பல் நிறத்தில் இருக்கும். இக்குருவிகள் பார்க்க மிகமிக அழகாக இருக்கும்.




## ரவீந்திரநாத டாகூர்



கவியரசர் டாகூர் ஒருமுறை கப்பலில் பெருநாட்டிற்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது அவரது உடல்நலம் குன்றவே கப்பல் டாக்டர் இவர் உடனேயே பயணத்தை நிறுத்தி சில நாட்கள் ஓய்வு பெறுதல் வேண்டும் எனக் கூறினார். அவரது நலனில் அக்கறை கொண்டவர்களும் அவரை அவ் வாறே செய்யுமாறு வற்புறுத்தவே அவர்களது யோசனைப்படி டாகூர் போனஸ் அயர்சில் இறங்கினார்.

அங்கு அவரை அவரது ரசிகையான விக்டோரியா ஒகான்சோ வரவேற்று நகரின் எல்லையிலுள்ள தம் மாளிகைக்கு அழைத்துச் சென்றார். உடல்நிலைச் சீரானதும் டாகூர் மீண்டும் கவிதைகள் எழுதத் தொடங்கினார்.

ஒருநாள் விக்டோரியா டாகூர் கவிதைகள் எழுதிய நோட்





டைப் பக்கம் பக்கமாகப் பிரித்து பார்த்து ஆங்காங்கே அவர் மையால் வரைந்த அழகிய படங்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். அவை உயிரோவியங்களாகத் திகழ்ந்தன. அவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் டாகூரிடம் "நீங்கள் எப்படிப்பட்ட ஓவியர் என்பது உங்களுக்கே தெரியுமா?" என்று கேட்டார்.

டாகூர் புன்முறுவல் புரிந்து எதுவும் கூறாதிருந்தார். கவிஞரிடம் மறைந்திருந்த ஓவியக் கலையுணர்ச்சி விக்டோரியாவின் இச் சொற்களால் உணர்வு பெற்றது. இது 1924ல் நிகழ்ந்தது. அப்போது டாகூரின் வயது 67. ஆயினும் அற்புதமான கற்பனைத் திறன் கொண்ட டாகூர் ஓவியங்களைத் தீட்டத் தீர்மானித்து தாம் அதற்கு மேலும் வாழ்ந்த 17 ஆண்டுகளில் ஓவியங்கள் வரைந்தார்.

டாகூர் சாதாரணத் தாளில் எழுதும் மை கொண்டு படங்களை வரைந்து வந்தார். மனிதர்களின் முகங்கள் பறவைகள் இயற்கைக் காட்சிகள் என்பது அவருக்குப் பிடித்தமானவை. அவரது ஓவியங்களில் மேற்கத்திய பாணி சற்றுத் தலைதூக்கிய போதிலும் பார்ப்பதற்கு அழகாயும் சொந்தக் கற்பனையாயும் இருக்கும். "வாழ்க்கையில் பலதுறைகளில் காணப்படும் பிரிவுகளைக் கூர்ந்து கவனித்தால் அவற்றைப் பரிசீலித்து எடுத்துக் காட்டும் அழிவற்ற ஒரே கலை அனுபவம் என்பதே" என அவர் கூறினார்.

டாகூர் 1941ல் மரணமுற்றார். ஆனால் அவர் சுமார் 2500 சித்திரங்களை வரைந்து வைத்து போயிருந்தார்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. அமெரிக்க தேசியக் கொடியில் எத்தனை கோடுகள் உள்ளன?
2. நாட்டிய சாஸ்திரத்தை பரத முனி இயற்றினார். பரத என்ற சொல் இசையின் மூன்று அங்கங்களைக் குறிக்கும் அந்த மூன்று அங்கங்கள் யாவை?
3. இத்தாலியில் தங்க ஆப்பிள் என்று எதைக் கூறுகிறார்கள்
4. ஆங்கில் மொழியில் கவிஞர்களின் கவிஞர் யார்?
5. காபூகி நாட்டியம் எந்த நாட்டைச் சார்ந்தது?
6. ஒரு மலர் மரத்தை நம் நாட்டிற்கு வேறொரு நாட்டிலிருந்து கொண்டு வந்தார்கள். அந்த மரம் அந்நாட்டில் தற்போது இல்லை. நம் நாட்டில் உள்ளது. அந்த மரம் எது? நாடு எது?
7. 1918ல் ஐஸ்லாந்து எந்நாட்டிலிருந்து விடுதலை பெற்றது?
8. இங்கிலாந்திலிருந்து ஆஸ்திரேலியாவிற்குத் தனியாக விமானம் ஓட்டிய முதல் பெண்மணி யார்?
9. உலகில் மிகப் பெரிய மாதா கோயில் எது?
10. ரோமிற்கு ஒரு தீவு கிடைக்க அதுவே ஒரு நாடாகியது. அத்தீவு யாது? நாட்டின் பெயர் என்ன?
11. குமாரகுப்தன், ஸ்கந்த குப்தன் காலத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற கணித மேதை யார்?
12. கிரேட் பிரட்டன் அயர்லந்து ஒன்றாக இருந்தபோது ஆட்சி புரிந்த ராணி யார்?
13. கருப்பர் தலைவர் மார்ட்டின் லூதர்கிங் எங்கு பிறந்தார்?
14. தகரத்தை மிக அதிகம் உற்பத்தி செய்யும் நாடு எது?
15. நம் நாட்டுக் கொடியின் நடுவே அசோகச் சக்கரச் சின்னம் உள்ளது. ஆனால் ஒரு நாட்டுக் கொடியின் நடுவே ஒரு சின்னமும் இல்லை. அது எந்த நாடு??

## விடைகள்

1. 13 வரிகள், சுதந்திரம் அடையுமுன் இருந்த 13 குடியேற்ற நாடுகளைக் குறிப்பது
2. பாவம், ராகம், தாளம்
3. தக்காளி
4. எட்மண்ட் ஸ்பென்சர் (1552-99)
5. ஜப்பான்
6. குல்மோஹர், மடகாஸ்கர்
7. டென்மார்க்
8. எமிஜான்சன்
9. வாடிகனின் செண்ட்பீடர் தேவாலயம்
10. சிசிலி (கி.மு 24)
11. ஆரியபட்டர்
12. ஆன்ராணி
13. அட்லாண்டா நகரம்
14. மலேசியா
15. லிபியா, பச்சைக் கொடி



# தெளிந்த மனம்

நகரத்திலேயே பிறந்து வளர்ந்த நளினிக்கு கிராமத்தை முதல் தடவை யாகப் பார்க்கும் வாய்ப்பு கிட்டி யது. தன் மாமனின் மகளின் திருமணத்திற்கு மலை அடிவாரத்தி லுள்ள அந்த ஊருக்கு அவள் வந் தாள். அவளது தந்தை மகாலிங் கம் நகரில் பிரபல வியாபாரி. தன் தங்கையின் மகளின் திரு மணம் என்பதற்காக அவர் குடும் பத்தோடு வந்திருந்தார்.

திருமணம் முடிந்ததுமே மகா லிங்கம் நகருக்குக் கிளம்பினார். அப்போது நளினி தன் தந்தை யிடம் "அப்பா! நான் இந்த ஊரில் ஒரு வாரம் இருந்து விட்டு வருகிறேன். இங்குள்ள மலை, வயல் வெளிகள் எல்லாம் எனக்குப் பிடித்திருக்கிறது" என் றாள்.

மகாலிங்கம் வேண்டாம் என்று சொல்வதற்குள் அவரது தங்கை யின் இரண்டாவது மகளான விமலா அவரிடம் "மாமா! நளி னிக்கு நான் இங்குள்ள வற்றை எல்லாம் சுற்றிக் காட்டுகிறேன். அதன் பின் நகருக்கு அவளை நானே கொண்டு வந்து விடுகி றேன்" என்றாள். அவரது தங்கை யும் நளினியை விட்டுப் போகும் படி வேண்டவே மகாலிங்கம் நளினியை அங்கேயே விட்டு விட்டு தன் மனைவியுடன் ஊருக் குக் கிளம்பினார்.

நளினி அங்கு மலைக்கோவி லைப் பார்த்தாள். மாந்தோப்பு களைக் கண்டுகளித்தாள். மாமா வின் ரோஜாத் தோட்டம் பிடித் தது. அங்கிருந்து காலையில் சூரியோதயம் பார்க்க அழகாக இருந்தது. தினமும் காலையில் அந்த அழகிய காட்சியைக் காண

—பாபநாசம் சாமா—



அவள் விமலாவுடன் அத் தோட்டத்திற்குச் சென்று வந்தாள்.

ஒரு நாள் விமலா உடல் நலமில்லாமல் இருக்கவே நளினி மட்டும் ரோஜாத் தோட்டத்திற்கு சென்றாள். அழகிய சூரியோதயக் காட்சியைக் கண்டுகளித்து விட்டுத் திரும்பும்போது அவள் ஒரு பெரிய ரோஜா மலரைச் செடியில் கண்டாள். அவள் அதைப் பறிக்க முயன்றபோது அவள் காலில் சுருக்கென்று ஏதோ கடிப்பது கண்டு கீழே பார்த்தாள் ஒரு நாகப் பாம்பு சரசர வென்று ஊர்ந்து சென்றது. அது தான் அவளைக் கடித்துவிட்டது.

அவள் மயங்கிக் கீழே விழுந்து விட்டாள். மறுபடியும் அவள் கண்ணைத் திறந்து பார்த்த போது ஒரு குடிசைக்குள் ஒரு கட்டிலில் படுத்திருப்பதைக் கண்டாள். சற்று தூரத்தில் ஒரு வாலிபன் நாற்காலியில் அமர்ந்திருப்பதையும் கண்டாள்.

அவள் கண்விழித்ததைப் பார்த்ததும் அந்த வாலிபன் "அப்பாடா! சரியாகிவிட்டதா? இப்போது தலை சுற்றல் எதுவும் இல்லையே?" என்று கேட்டான். அவளும் இல்லை என்று தலையை ஆட்டினாள். அப்போது அவன் "இன்னமும் கொஞ்ச நேரம் படுத்துக் கொண்டிரு. நீ, மட்டும் ரோஜாத் தோட்டத்தில் விழுந்து கிடந்ததைக் கண்டேன். உங்கள் வீட்டிற்குத் தகவல் கொடுத்து விட்டு உன்னை இங்கே எடுத்து வந்து சிகித்சை அளித்தேன் அதிகாலை இருட்டில் இப்படித் தனியாக வரலாமா? யாரையாவது துணைக்கு அழைத்துக் கொண்டு வந்திருக்க வேண்டும்" என்றான். இதற்குள் மாமாவும் நளினியின் அத்தையும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் நளினியைக் கண்டதும் மகிழ்ந்து போனார்கள். அவளது அத்தை அந்த வாலிபனைப் பார்த்துக் கைகூப்பி வணங்கி "ஸ்ரீதரா! நீ தான் கடவுள்போல வந்து இவளைக் காப்

பாற்றினாய். இது எங்கள் நல்ல அதிர்ஷ்டமே'' என்றாள்.

நளினியை அப்போதே அழைத்து போவதாக அவளது மாமா கூறவே ஸ்ரீதரனும் "வேண்டாம். இன்று முழுவதும் இங்கேயே இருக்கட்டும். நான் கொடுத்த மருந்து எப்படி வேலை செய்கிறது என்று பார்த்துத் திருப்தி அடைந்தபின் அனுப்புகிறேன்'' என்றான்.

மறுநாள் நளினி குணமடைந்து விடவே ஸ்ரீதரன் அவளை அவளது வீட்டிற்கு அனுப்பி விட்டான். அவளது மாமியும் அவனிடம் "இந்த ஸ்ரீதரன்தான் எவ்வளவு நல்லவன்! ஸ்ரீதரனுக்கு கொஞ்சம் நிலம் உள்ளது. இவனது தகப்பனார் வைத்தியராக இருந்து எல்லோருக்கும் இலவசமாக வைத்தியம் பார்த்து வந்தார். அவர் இறந்தபின் இவன் அவரைப் போலவே எல்லோருக்கும் இலவசமாக வைத்தியம் பார்க்கிறான்'' என்றாள்.

அதைக் கேட்ட நளினிக்கு ஸ்ரீதரனின் பால்பரிவு எற்பட்டது. ஒரு அழகிய இளம் வாலிபன் இத்தகைய பணி புரிகிறானே என்று மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தாள். தன் உயிரைக் காப்பாற்றியதற்கு அவள் அவனுக்குத் தன் மனதில் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள்.

அந்த ஊரில் இருந்த ஒரு வார



காலத்தில் மாலை வேளைகளில் அவள் ஸ்ரீதரனைக் கண்டு பேசினாள். அவள் ஊருக்குப் புறப்படுமுன் ஸ்ரீதரனிடம் " இந்த ஒரு வார காலமாக என் மனதில் மறைந்திருந்த ஒரு விஷயத்தைக் கூறுகிறேன். என் உயிரைக் காத்த உங்களையே மணக்க நான் விரும்புகிறேன். உங்கள் அபிப்பிராயம் என்னவோ?'' என்று கேட்டாள்.

அப்போது ஸ்ரீதரன் "உங்கள் குடும்பம் பற்றி எனக்குத் தெரியும். நீங்கள் பெரிய பணக்காரர்கள். நான் சாதாரண குடும்பத்தவன். உங்கள் வீட்டில் இதற்குச் சம்மதிக்கமாட்டார்கள்.'' என்றான்.



றார். ஆனால் தம் ஊருக்கு அன்றிரவே திரும்பி வந்த அவர் முகத்தில் எள்ளும் கொள்ளுமாக வெடிக்க 'இந்த கல்யாணம் நடக்காது'' என்று சொல்லிக் கொண்டே உட்கார்ந்தார்.

அதைக் கேட்டு நளினி திடுக்கிட்டாள். அப்போது அவளது தாயார் மகாலிங்கத்திடம் "ஏன்? என்ன நடந்தது?'' என்று கேட்டாள். மகாலிங்கமும் "நளினியைக் கல்யாணம் செய்து கொண்ட பின் அவன் இங்கு வந்து என்னோடு இருந்து வியாபாரத்தை கவனித்துக் கொள்ள மாட்டானாம். அந்த ஊரிலேயே இருந்து வைத்தியத் தொழிலைத்தான் தொடர்வானாம். அதுதான் அவன் கடமையாம். நளினியைக் கல்யாணம் செய்து கொள்பவன் நளினியோடு தானே இருக்க வேண்டும். அப்படி இருக்காவிட்டால் எப்படி இந்தக் கல்யாணம் நடக்கும்?'' என்றார்.

நளினி மறுநாளே ஸ்ரீதரனைக் காண அவனது ஊருக்குப் போய் அவனது வீட்டிற்குப் போனாள். ஸ்ரீதரனும் "சாப்பாட்டு வேளைக்கு வந்திருக்கிறாய். கொஞ்சம் உட்கார். சட்டெனச் சமையல் செய்து சாப்பாடு போடுகிறேன்'' என்றான்.

நளினியும் "நான் சாப்பிட இங்கு வரவில்லை. என் மாமா

நளினியோ "நான் அவர்களைச் சம்மதிக்க வைக்கிறேன். இதில் நம் இருவரின் விருப்பம்தான் முக்கியம். உங்களுக்குச் சம்மதம் தானே'' என்று கேட்டாள். ஸ்ரீதரனும் "சரி முயற்சித்துப் பார்'' என்று கூறி அனுப்பினான்.

நகரை அடைந்ததும் நளினி தன் பெற்றோர்களிடம் நடந்ததை எல்லாம் கூறி'' என் உயிரைக் காத்த ஸ்ரீதரனையே நான் மணந்து கொள்ளப் போகிறேன்'' என்றாள்.

தன் ஒரே மகளின் விருப்பத்திற்கு மாறாக நடக்க விரும்பாமல் மகாலிங்கம் மறுநாளே ஸ்ரீதரனைக் காண அவனது ஊருக்குச் சென்

வின் வீட்டிலேயே வயறு நிறம்பச் சாப்பிட்டுவிட்டேன். என்னைக் கல்யாணம் செய்து கொண்டபின் எங்கள் வியாபாரத்தை கவனிக்க முடியாது என்றீர்களாமே. நீங்கள் உங்கள் தந்தையின் தொழிலைத் தொடர்வது உங்கள் கடமை என்றால் என் தந்தையின் ஒரே மகளான நான் என் தந்தையின் தொழிலைத் தொடர்வது என் கடமை இல்லையா?'' என்று கேட்டாள்.

ஸ்ரீதரன் புன்னகை புரிந்தவாறே ''நீ கூறுவதுபோல இருவருக்கும் கடமை உள்ளது என்றாலும் உன் தந்தையின் வியாபாரம் அந்த ஊரில் இல்லாது போனாலும் வியாபாரம் செய்ய இன்னும் பல வியாபாரிகள் இருக்கிறார்கள். ஆனால் நான் இங்கிருந்து போய்விட்டால் இங்குள்ள மக்களுக்கு இலவசமாக வைத்தியம் செய்ய யார் இருக்கிறார்கள்? ஒருவரும் இல்லையே'' என்றான்.

அப்போது ஒரு பிச்சைக்காரன் வந்து ''ஐயா! ஒரே பசி. இரண்டு நாளாக எதுவும் சாப்பிடவில்லை'' என்று கத்தவே ஸ்ரீதரன் தனக்காக வைத்திருந்த பழங்களை எடுத்துக் கொடுத்துவிட்டான். அவற்றைச் சாப்பிட்ட அவன் ''நீங்கள் நெடுங் காலம் வாழ வேண்டும் தர்மப் பிரபு'' என்று வாழ்த்திவிட்டுப் போனான்.

அக்காட்சியைக் கண்டதும் நளினிக்கு ஒரு புதிய உண்மை தெரிந்தது. அவள் எதுவும் பேசாமல் எழுந்து நின்றாள். ஸ்ரீதரனும் ''ஏன் பேசாமல் இருக்கிறாய்?'' எனவே அவளும் வெட்கப்படவாறே ''நம் கல்யாணத்திற்கு எப்படி எல்லாம் ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்றுதான் யோசித்துக் கொண்டிருந்தேன். நாம் வசித்து வர இந்த வீடே போதும்'' எனக் கூறிப் புன்முறுவல் புத்தாள்.





# பேசும் கிளி

வேம்பூரில் வேலப்பன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் தன்னை மிஞ்சிய பணக்காரனோ அறிவாளியோ அவ்வூரில் கிடையாது என எண்ணி வந்தான். வெளியூர் போனால் அங்கு கண்ட அதிசயப் பொருளை வாங்கி வந்து தன் ஊராரிடம் காட்டி அது போன்ற பொருள் அவ்வூரில் வேறு யாரிடமும் இல்லை என்று கர்வத்தோடு கூறி வருவான்.

ஒருநாள் யாரோ ஒருவன் அவனிடம் "நம் ஊர் ராமப்பனிடம் பேசும் கிளி இருக்கிறதே. அது போல் உங்களிடம் இருக்கிறதா?" என்று கேட்டான். வேலப்பனும் "பேசும் கிளியா? அப்படி ஒன்று உலகில் இருப்பதாக நான் கேள்விப்பட்டதே இல்லையே" என்றான். அதற்கு அந்த மனிதன் "இருக்கிறது. ராமப்பன் வீட்டிற்குப் போய்ப் பாருங்கள் அப்போது தெரியும்." என்று கூறி விட்டுப் போனான்.

வேலப்பன் உடனே ராமப்பன் வீட்டிற்குச் சென்றான். அப்போது ராமப்பன் தன் வீட்டுக்கு் கொல்லையில் இருந்ததால் வேலப்பன் கூப்பிட்டது அவன் காதில் விழவில்லை. வேலப்பன் வீட்டினுள் நின்று சுற்றிலும் பார்த்தபோது ஒரு குரல் "வாருங்கள் உட்காருங்கள். ராமப்பா வீட்டில்தான் இருக்கிறார். இதோ வந்துவிடுவார்" என்று கூறியது.

வேலப்பன் சுற்றிலும் பார்த்தான். அந்தக் குரல் ஒலி மூலையிலுள்ள கிளிக் கூண்டிலிருந்துதான் வந்தது என்று தெரிந்து கொண்டான். மறுபடியும் கிளி அதே வார்த்தைகளைக் கூறவே வேலப்பன் "ஆ! கிளி பேசுகிறதே என்ன

—காரை, குருமூர்த்தி—

அதிசயம்!'' என்று ஆச்சரியப்பட்டான்.

அப்போது ராமப்பன் வீட்டினுள் வந்தான். வேலப்பன் வந்திருப்பதைக் கண்டு "வாருங்கள். என்ன விசேஷம்?'' என்று கேட்டான். வேலப்பனும் "நான் ஏதோ வேலையாகப் போனபோது யாரோ பேசும் குரல் கேட் டது. உள்ளே வந்து பார்த்தால் அப்படிப் பேசியது இந்தக் கிளி தான் என்று தெரிந்தது. இதை எனக்கு விலைக்குக் கொடுக்கிறாயா?'' என்று கேட்டான்.

ராமப்பனும் "விலைக்கா? முடியாது. எவ்வளவு சிரமப்பட்டு நல்ல வார்த்தைகள் சொல்லிக் கொடுத்து இதைப் பேசப் பழக்கி இருக்கிறேன். இதைக் கொடுக்க மாட்டேன்'' என்றான். வேலப்பனோ விடாமல் "நீ மட்டும் இதை எனக்குக் கொடுத்தால் நூறு ரூபாய் கொடுக்கிறேன்'' என்றான்.

ராமப்பன் அந்தக் கிளியை ஐந்து ரூபாய் கொடுத்து ஒரு மலைவாசியிடமிருந்து வாங்கினான். அதற்கு வேலப்பன் நூறு ரூபாய் கொடுப்பதாகச் சொன்னதைக் கேட்டு அக்கிளிக்கு இன்னும் அதிக விலை பெற எண்ணி சற்று பிகு செய்தான். முடிவில் அதை இருநூறு ரூபாய்க்குக் கொடுப்பதாகக் கூறி "இதோ பாரும். இப்



போது விலைக்கு இதனை வாங்கிவிட்டு நாளை வேண்டாம் என்றால் நான் பணத்தைத் திருப்பிக் கொடுக்கமாட்டேன் விலைக்கு விற்றேன் என்றால் விற்றதுதான். தெரிந்ததா?'' என்றான்.

வேலப்பனும் அதற்குச் சம்மதித்து இருநூறுரூபாய் கொடுத்து ராமப்பன் கிளியை எடுத்துச் சென்றான். ஆனால் மூன்று நாட்கள் கழிந்ததும் அவன் அக்கிளியோடு ராமப்பன் வீட்டிற்குப்போய் "இந்தக் கிளிக்கு நேற்று முதல் என்ன ஆயிற்றோ தெரியவில்லை! முட்டாள், கழுதை, முண்டம், தடிமாடு என்ற வார்த்தைகளைத் தான் சொல்லிக் கொண்டிருக்

கிறது இந்தா! நீயே இதை வைத்துக் கொள் இது எனக்கு வேண்டாம், என் பணத்தைத் திருப்பிக் கொடு" என்றான்.

ராமப்பனோ "எனக்கு வேண்டாம். அன்று விற்கும் போதே திரும்ப வாங்கிக் கொள்ளமாட்டேன் என்று சொன்னேனே. உனக்கு வேண்டாம் என்றால் அதை எங்காவது கொண்டுபோய்விடு" என்று கூறினான்.

வேலப்பனுக்குக் கோபம் வந்து "ஒழிந்து போ' என்று கிளியைப் பறக்கவிட்டுப் போய்விட்டான். கிளி பறந்து போயிற்று. சற்று நேரத்திற்குப் பின் ராமப்பன் மனைவி ஓடி வந்து "கிளி நம் வீட்டுக்கே வந்துவிட்டது. ஆனால் முன்போல் நல்ல வார்த்தைகள் பேசாமல் கண்டபடி வசை மாரி பொழிகிறதே" என்று கூறினாள்.

ராமப்பனும் சிரித்தவாறே "கவலைப்படாதே. அது இன்னமும் சற்று நேரத்தில் நல்ல வார்த்தைகளாகச் சொல்லப் போகிறது பார். அதற்கு வாரத்திற்கு ஒரு முறை பாதாம் பருப்பு கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுக்காவிட்டால் அது கண்டபடி திட்ட ஆரம்பித்துவிடும். இந்த விஷயத்தை அந்த மலைவாசி என்னிடம் சொல்லி இருந்தான். ஆனால் நான் அதை வேலப்பனிடம் சொல்லவில்லை. அதனால்தான் அது குறித்த நாளில் பாதாம் பருப்பு கிடைக்காததால் திட்ட ஆரம்பித்தது. நான் அதற்கு பாதாம் பருப்பைக் கொடுக்கிறேன். அதைச் சாப்பிட்டுவிட்டு நல்ல வார்த்தைகளாக அது மறுபடியும் சொல்லும் பார்" என்று கூறி பாதாம் பருப்பைக் கொடுத்தான்.

கிளியும் அதைத் தின்றபின் முன்போல் நல்ல வார்த்தைகளைக் கூறலாயிற்று.






துவாபரயுகத்தில் மகாவிஷ்ணு கிருஷ்ணாவதாரம் எடுத்து கம்சன் முதலியவர்களை ஒழித்து மக்களின் துயர் தீர்த்து துவாரைகையில் சுகமாக வாழ்ந்து வந்தார். அவரது அண்ணன் பலராமன் யாதவர்களின் தலைவனாக ஆட்சிபுரிந்து வந்தான்.

கிருஷ்ணருக்குத் துணையாக சத்தியபாமா போய் மக்களை மிகவும் துன்புறுத்தி வந்த நரகாசுரனை வென்றாள். அதனால் தான் என்ற கர்வம் அவளுக்கு ஏற்பட்டுவிட்டது. இந்நிலையில் நாரதர் பாரிஜாத மலரை தேவலோகத்திலிருந்து கொண்டு வந்து கிருஷ்ணரிடம் கொடுத்தார். அதை அவர் ருக்மிணிக்குக் கொடுத்துவிட்டார்.

இதனால் சத்திய பாமா வெகுண்டு தனக்கு பாரிஜாத மரமே வேண்டும் எனக் கிருஷ்ணரிடம் சொல்லி அவரை தேவலோகத்திற்கும் அழைத்துப் போனாள். அங்கிருந்து பாரிஜாத மரத்தையே பெயர்த்து எடுத்துக் கொண்டு அவர்கள் வந்து கொண்டிருந்தார்கள். கருட வாகனத்தில் சென்று கொண்டிருந்த அவர்களை நோக்கி இந்திரன் தன் வச்சிராயுதத்தை வீசினான். ஆனால் கருடன் தன் இறக்கைகளைப் பட படவென்று அடித்து அந்த வச்சிராயுதத்தைத் தொலைதூரத்தில் போய் விழச்

—கிருஷ்ணருடன் சண்டை—



செய்தான். அதனால் தனக்கு பலம் அதிகம் என எண்ணி கருடன் கர்வம் கொண்டான். சத்தியபாமாவும் பாரிஜாத மரத்தை தன் வீட்டில் பெருமையுடன் நட்டு இறுமாப்புக் கொண்டான்.

பலராமனும் பல கொடியவர்களை கொன்றும் சங்காசுரனின் ஆருயிர் நண்பனான துவீதன் என்ற மிக பயங்கர வாலில்லாக் குரங்கைக் கொன்றும் தானே பலசாலி என்று கர்வப்பட்டுக் கொண்டிருந்தான்.

சத்தியபாமா, கருடன், பலராமன் ஆகிய மூவரின் கர்வத்தை அடைக்கத்தக்க சமயம் எப்போது வரும் என்று கிருஷ்ணர் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்.

கருடன் ஒருநாள் ஒரு பாம்புக் குட்டியைப் பிடிக்கப் போன போது அதன் தாயான காஞ்சனா சட்டென வந்து தன் குட்டியைத் தூக்கிக் கொண்டு வேகமாகச் சென்றவாறே 'காப்பாற்றுங்கள்'' காப்பாற்றுங்கள்'' என்று கதறியது.

அப்போது அங்கு நாரதர் வந்து கொண்டிருந்தார். அவர் அவளிடம் "ஸ்ரீராம நாமத்தை உச்சரித்துக் கொண்டே அனுமாரிடம் சரணடை. அவர் உங்களைக் காப்பாற்றுவார்" என்று கூறி போனார். காஞ்சனா அனுமார் தவம் செய்யும் கந்தமாதன பர்வதத்திற்குப் போய் "ராமா!! காப்பாற்று" எனக் கூவினாள்.

அனுமாரும் "வா! உனக்கு நான் அடைக்கலம் அளிக்கிறேன்" என்றார். கருடன் அவர்களைப் பிடிக்க வருவதைக் கண்ட அவர் "ஏய் கருடா! உனக்குப் பசி என்றால் என்னைக் கொன்று சாப்பிடு. இவர்களை நீ தொடக் கூடாது" என்றார்.

கருடனோ "பாம்புகளே என் உணவு. எனவே அவர்களைத் தான் பிடித்து உண்ணப் போகிறேன்" என்று காஞ்சனா மீதும் அதன் குட்டியின் மீதும் பாயப் போனாள். ஆனால் அனுமார் தன் வாலால் கருடனை அடித்து அவனைப் பிடித்து உயரத் தூக்கி

எறிந்தார். கருடன் நேராக பலராமனின் முன் போய் தொப்பென விழுந்தான். காஞ்சனா அனுமாரை வணங்கி நன்றி தெரிவித்துவிட்டுத் தன் குட்டியுடன் நாக லோகம் போய்ச் சேர்ந்தாள்.



கருடன் பட்டபாட்டைக் கேட்ட பலராமன் "கருடா! கவலைப் படாதே நான் அந்தக் குரங்கைப் பார்த்துக் கொள்கிறேன். நீ போய் நான் கட்டளை இட்டதாகக் கூறி அந்தக் குரங்கை இங்கே அழைத்து வா" என்றான்.

கருடன் பயந்து கொண்டே போய் அனுமாரிடம் பலராமனின் கட்டளையைத் தெரிவித்தான். ஆனால் அவர் அதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. கருடன் தன் இறக்கைகளைப் பட படவென்று அடித்தும் அவரது தவத்தைக் கலைக்க முடியவில்லை. அவன் பேசாமல் வந்த வழியே திரும்பிச் சென்றான்.

அப்போது கிருஷ்ணர் பலராமனிடம் ஏதோ பேச வேண்டும் என்பதுபோல வந்தார். கருடன் பலராமனிடம் அனுமார் அவனது கட்டளையைச் சற்றும் மதிக்காதது பற்றிக் கூறிக் கொண்டிருந்தான். அப்போது கிருஷ்ணர் "நீ போய் அவரிடம் ராமரின் கட்டளை என்று சொல். உடனே வந்துவிடுவார்" என்று கருடனிடம் கூறினார்.

கருடனும் மீண்டும் கந்த மாதனப் பர்வதத்திற்குப் போய் கிருஷ்ணன் கூறியபடித் தெரிவிக்கவே அனுமார் அவனுடன் துவாரகைக்கு வந்தார். அவர் "ராமா ராமா" என்று உரக்கச் சொல்லவே, பலராமன் இறுமாப்போடு "இராமன் இல்லை, பலராமரே! வணக்கம் என்று பணிவுடன் சொல்" என்றான்.

அதுகேட்டு அனுமார் கோபம் கொண்டு "ஓ! நீ பலராமனா அல்லது பல் ராமனா?" என்று கர்ஜித்தார். பலராமன் தன் ஆயுதமான கலப்பையால் அனுமாரைத் தாக்க முயன்றான். அனுமார் அதைத் தன் வாலில் சுருட்டி எடுத்து



தூரவிட்டெறிந்தார். அது கண்டு பலராமன் அவர் மீது பாய்ந்தான். அனுமார் அவனைத் தன் இரு கைகளையும் பிடித்து உயரத் தூக்கிச் சுற்றினார். பலராமன் தலைசுற்றித் தன் நினைவையே இழந்தான். அப்போது அவனுக்குத் தன் முன் பிறப்பு என்ன என்று தெரிந்தது. ராமரின் பட்டாபிஷேகத்தின்போது லட்சுமணன் 'கொல்' லென்று சிரித்தான். சபையோர் யாவரும் இலட்சுமணன் தம்மைப் பார்த்து ஏளனமாகச்சிரிப்பதாக எண்ணிவிட்டார்கள். இராமரும் தம் வாளை உருவி இலட்சுமணனைத் தாக்கப் போகவே அனுமார் குறுக்கிட்டு இலட்சுமணன் சிரித்த காரணத்தைத் தெரிந்து கொண்டு அதைச் சபையோரிடம் கூறினார். "வனவாசத்தின்போது இராமரைக் காக்க இலட்சுமணன் பதிநான்கு ஆண்டுகள் தூங்கவில்லை. அவன் நித்திரா தேவியிடம் இராமரின் பட்டாபிஷேகத்திற்குப் பிறகு வரும்படிக் கூறி இருந்தான். தூக்கமில்லாமல் இருந்த இலட்சுமணன் அப்போது நித்திரா தேவி வருவது கண்டே சிரித்தான்" என்று அனுமார் இராமரிடம் கூறினார். பிறகு அவர் இராமரிடம் அவர் இலட்சுமணனுக்கு ஒரு வாழைப் பழம் கொடுத்து அவனது உண்ணாவிரதத்தை முடித்து வைத்ததை நினைவுபடுத்திஞர்.

இராமர் இலட்சுமணனைத் தழுவிக் கொண்டு "தம்பீ! நீ அடுத்த பிறப்பில் என் அண்ணனாகப் பிறப்பாய். நான் உனக்குப் பணிபுரிவேன்" எனக் கூறியதையும் அனுமார் பலராமனின் நினைவிற்குக் கொண்டு வந்தார்.

அப்போது தான் பலராமனுக்குத் தான் முன்பிறப்பில் இலட்சுமணனாக இருந்தது நினைவிற்கு வந்தது. அவன் மயக்கம் தெளிந்து அனுமாரிடம் "சஞ்சீவராயரே! அன்று சஞ்சீவி மூலிகை கொண்டு வந்து என் மயக்கத்தைப் போக்கினீர்கள். இன்றைய என் மயக்கத்தில் நான் யார் என்பதையும்

உணர்த்தினீர்கள். இதோ நம் ராமர்'' என்று கூறிக் கிருஷ்ணரை காட்டினான்.

அப்போது கிருஷ்ணர் தன் அண்ணனை அனுமார் தாக்கினார் என்று கேட்டு ஓடி வந்து அனுமாரைத் தாக்கலானார். அவர்களிடையே கடும் சண்டை வெகு நேரம் நடந்தது.

வெகுநேரம் நடந்த சண்டையில் அனுமார் முடிவில் கிருஷ்ணரைக் கீழே வீழ்த்தினார். அப்போது அவர் எழுந்து சிங்கம் போலப் பாய்ந்து தம் காலால் அனுமாரின் மார்பில் உதைக்கவே அனுமார் அந்தப் பாததுாளிபட்டதும் இராமரே கிருஷ்ணராக அவதரித்திருக்கிறார் என்று தெரிந்து கொண்டார். சீதையின் அக்கினிப் பிரவேசத்திற்கு முன் தாம் இராமரை எதிர்க்கப் போய் அவர் புன்முறுவலுடன் "இப்போது வேண்டாம். அடுத்த பிறவியில் சண்டை போடுவோம்'' என்றது அனுமாரின் நினைவிற்கு வந்தது.

அனுமார் கிருஷ்ணரை வணங்கி "நீங்கள் எனக்கு இராமராகவே காட்சி அளிக்கிறீர்கள்'' என்று கூறிப் பணிவுடன் வணங்கினார். அப்போது கிருஷ்ணர் "சரி இதோ இலட்சுமணன். சற்றுப் பொறுங்கள். சீதையையும் வரச் சொல்கிறேன்'' எனறார்.

தானே ஒவ்வொரு பிறப்பிலும் மகாவிஷ்ணுவின் மனைவி என எண்ணி கர்வம் கொண்டிருந்த





சத்தியபாமா இராமாவதாரத்தின் போதுதானே சீதையாக இருந்தவள் என எண்ணிக் கொண்டு அனுமாரும் கிருஷ்ணரும் இருந்த இடத்திற்கு வந்தாள். தலை நிறைய பாரிஜாத மலரை வைத்துக் கொண்டு அவள் ஒய்யாராமாகக் கிருஷ்ணரின் பக்கத்தில் போய் நின்றான்.

அனுமார் சத்தியபாமாவைப் பார்த்ததுமே "ஓ! நீ சீதாதேவி அல்ல,முன் பிறப்பில் சந்திரசேனையாக இருந்தவள். இராமர் அப்போது கிருஷ்ணாவதாரத்தின் போது தம் எட்டு மனைவிகளுள் உன்னையும் ஒருத்தியாக மணந்து கொள்வதாகக் கூறினார். அது தான் நடந்திருக்கிறது. எனவே நீ பாக்கியசாலிதான், சந்திரசேனா" என்றார்.

அதுகேட்டு சத்தியபாமாவுக்குத் தன் முன்பிறப்பு பற்றித் தெரிந்தது. அவள் தன் கர்வத்தை விட்டு உடனே ருக்மிணியிடம் போய் "அக்கா! நீங்கள்தாம் சீதா தேவியாக இருந்தவர். அனுமார் உங்களை தரிசிக்கக் காத்துக் கொண்டிருக்கிறார். வாருங்கள்" எனக் கூறி அவளை அழைத்துச் சென்றார்.

ருக்மிணி சீதையாகக் கிருஷ்ணரின் பக்கம் நின்றாள். கிருஷ்ணர் வில்லேந்திய இராமராகக் காட்சி அளித்தார். பலராமன் இலட்சுமணனாகப் பணிவுடன் நின்றான். அனுமார் கிருஷ்ணரின் பாதங்களின் பக்கம் அமர்ந்து பணிவுடன் வணங்கினார்.

இராமராகக் காட்சி அளித்து விட்டு முன்போலாகிய கிருஷ்ணர் அனுமாரை எழுப்பி "அனுமாரே! நீங்கள் இமயமலையில் கதலி வனத்தில் போய் இருங்கள். அங்கு வாயுவின் மகனும் உங்கள் தம்பியுமான பீமன் வருவான். அவனுக்கு மல்யுத்தம், கதாயுத்தம் ஆகியவற்றில் மேலும் பயிற்சி அளியுங்கள்" என்றார்.

சத்தியபாமா அனுமாரின் முன் வந்து "அன்று நீங்கள் என்னிடம் இராமரைக் கொண்டு வந்து சேர்த்

தீர்கள். இன்று அதற்காக நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றாள். அனுமார் அவளை வணங்கி "நீ சத்திய பாமா. சத்தியம் என்றும் உன் னோடு இருக்கும் என்பதைக் காட்டவே உன் கணவராகக் கட வுளான கிருஷ்ணர் உன்னோடு இருக்கிறார். நீ மிகமிக அதிர்ஷ்ட சாலிதான்" என்றார்.

அதுகேட்டு சத்தியபாமா அனு மாரிடம் "இன்றுதான் உங்கள் வாயிலாக உண்மை என்ன என்று தெரிந்து கொண்டேன். என் கர்வமும் ஒழிந்தது" என்றார்.

அனுமார் கிருஷ்ணரிடமும் ருக்மிணியிடமும் விடைபெற்றுக் கொண்டு கிளம்பலானார். அப் போது பலராமன் அனுமாரைக் கட்டித் தழுவிக் கொண்டு "சஞ்சீவராயரே! உங்களால் நான் யார் என்பதை அறிந்து கொண் டேன். என் கர்வமும் போயிற்று. உங்களுக்கு என் நன்றி" எனக் கூறினான்.

கருடனும் அனுமாரை வணங்கி "அனுமாரே! பாற்கடலில் நீங் களும் நானும் மகாவிஷ்ணுவோடு இருப்போம். கிருஷ்ணர் தாமே மகாவிஷ்ணு எனக் கூறியது என் நினைவிற்கு வருகிறது. நான் உங்களைக் கதலிவனத்தில் கொண்டு போய்விடுகிறேன்" எனக்கூறி அவரை அழைத்துச் சென்றான்.

கதலிவனத்தில் வாழைமரங்க ளோடு இன்னும் பல பழமரங் களும் இருந்தன. இமயமலையி லிருந்து வரும் நீரோடை அதற்கு அழகை அதிகரிப்பதாகவும் இருந் தது. அனுமார் அந்தக் கதலிவனத் தில் கிழக் குரங்கின் உருவில் ஒரு வாழைமரத்தின் கீழ் அமர்ந்து கண்களை மூடிக் கொண்டு தவம் செய்யலானார். அவரது வால் நீண்டு வழியின் குறுக்கே கிடந் தது. அவர் பக்கத்தில் அவரது கதையும் இருந்தது.





# விசித்திர மருந்து

தனசேகரன் தங்கபுரத்திலேயே பெரிய பணக்காரன். பணமிருந்தும் அவன் உடல்நலம் இல்லாதிருந்தான். எந்த வைத்தியராலும் அவனது நோயைக் குணப்படுத்த முடியவில்லை. அந்த நோய் என்ன என்றுகூட அவர்களுக்குத் தெரியவில்லை.

இச்சமயத்தில் அவ்வூருக்கு பரமானந்தர் என்ற யோகி வந்தார். அவர் ஊருக்கு வெளியே தம் ஆசிரமத்தை அமைத்துக் கொண்டார். அவர் தம் சக்தியால் பல அதிசயங்களை நிகழ்த்துகிறார் என்றும் தீராத நோய்களை எல்லாம் தீர்த்து வைப்பார் என்றும் மக்கள் கூறலானார்கள். அதுகேட்டு தனசேகரன் தன் மனைவியை உடன் கூட்டிக் கொண்டு அவரை தரிசிக்கச் சென்றான்.

அவன் பரமானந்தரிடம் தனக்கு ஏதோ ஒரு இனம் தெரியாத நோய் இருப்பதாகக் கூறவே அவர் புன்னகை புரிந்து "உனக்கு இந்த ஊரில் யாராவது விரோதிகள் இருக்கிறார்களா?" என்று கேட்டார்.

தனசேகரனும் "இந்த ஊரில் என் விரோதிகள் நிறைய இருக்கிறார்கள். அவர்களுக்கு என் பணத்தைத் கண்டு பொறாமை. அவர்களில் யாராவது பில்லி, சூனியம் வைத்திருப்பார்கள் என்கிறீர்களா?" என்று கேட்டான். அப்போது அவனருகே இருந்த அவனது மனைவி "ஏன் இப்படிப் பிறரைப்பற்றிக் குறை கூறுகிறீர்கள்? உங்கள் சுபாவமே இதுதான்" எனறாள்.

பரமானந்தரோ "உன் கணவன் சொல்ல விரும்புவதைச் சொல்லட்டும்" எனவே தனசேகரனும்

—சங்கரசுவாமி—



"என் பக்கத்து வீட்டுக்காரர்களும் என் உறவினர்களும் என்னைக் காணவே வெறுக்கிறார்கள். இந்த ஊரிலேயே என் வீடுதான் பெரியது. ஆனால் நேற்று வந்த லட்சுமணன் என்ற வியாபாரி என் வீட்டைவிடப் பெரிதாகக் கட்டிவிட்டான். அதனால் தலை கால் தெரியாமல் துள்ளுகிறான். என் உறவினர்களோ நான் எப்போது இறப்பேன் என்றும் என் சொத்தைக் கவர்ந்து கொள்ளலாம் என்றும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் மீது பெருத்த இடிவிழுந்து இவர்களெல்லாம் ஒரேயடியாக ஒழிந்து போனால் தான் என் மனம் நிம்மதியை அடையும்" என்றான்.

அப்போது பரமானந்தர் யோசித்து சில சிறு மருந்துப் பொட்டலங்களை அவனிடம் கொடுத்து "உனக்கு வந்துள்ள நோய் என்னவென்று தெரிந்துவிட்டது. நீ தினமும் இந்த மருந்தை ஒரு பொட்டலம் வீதம் சாப்பிட்டு வா. மேலும் நீயும் உன் மனைவியும் கொஞ்ச நாட்கள்தீர்த்த யாத்திரை போய் வாருங்கள். அப்போது உன் நோய் குணமடைந்து விடும்" என்றார்.

தனசேகரனும் தன் மனைவியுடன் காசி ராமேஸ்வரம் என்று பல ஊர்களுக்குச் சென்றான். ஆறு மாத காலம் இவ்வாறு போய் யோகி கொடுத்த மருந்தைச்சாப்பிட்டதில் தன் நோய் முற்றிலும் போய்விட்டதாக அவன் உணர்ந்தான். அவன் தன் ஊருக்கு வந்த போது பரமானந்தர் வடநாட்டில் யாத்திரை செய்து வரப் போயிருந்தார்.

ஒரு மாத காலம் கழிந்தது. அப்போது தனசேகரன் மீண்டும் தனக்குப் போன நோய் வந்துவிட்டதாக உணர்ந்தான். யோகி கொடுத்த மருந்துப் பொட்டலங்களும் தீர்ந்து போயின. அதற்கு ஒரு மாதத்திற்குப் பிறகே பரமானந்தனர் ஆசிரமத்திற்கு வந்தார். அவர் வந்த அன்றே தனசேகரன் தன் மனைவியோடு அவ

ரது ஆசிரமத்திற்குச் சென்று அவரைக் கண்டான்.

அவரும் "உன் யாத்திரை நன்கு நடந்ததா? உன் நோயும் போயிற்றா?" என்று கேட்டார். தனசேகரனும் "யாத்திரையின்போது நோய் இருப்பதாக நான் உணரவில்லை. ஆனால் நான் இங்கு திரும்பி வந்த பிறகு போன நோய் திரும்ப எனக்கு வந்துவிட்டது. முன்பு கொடுத்த மருந்தை இன்னமும் ஒரு வருட காலம் சாப்பிடுவதற்குக் கொடுத்தால் நோய் போய் விடும்" என்றான்.

அது கேட்டுப் பரமானந்தர் சிரித்தவாறே "அந்த மருந்தை உன் வீட்டிலேயே தயாரிக்கலாம். அதற்கான முறையை நான் உன் மனைவியிடம் தெரிவிக்கிறேன். நீ போய் அந்தக் கோவிலில் உட்கார்ந்திரு" என்றார்.

தனசேகரன் அங்கிருந்து போனதும் பரமானந்தர் அவன் மனைவியிடம் "உன் கணவருக்கு உண்மையில் எவ்வித நோயும் இல்லை. ஊரிலே தான்பணக்காரன் என்று எண்ணி அவன் மற்றவர்களைத் தன் விரோதிகளாக நினைக்கிறான். இதனால் பயம் கொள்கிறான். எங்கே லட்சுமணன் தன்னைவிடப் பணக்காரனாகி விடுவானோ என்று பொறாமைப் படுகிறான். உறவினர்களிடமும் இது போல பயம் கொண்டிருக்கிறான். இந்த பயமே அவனது மன அமைதியைக் கெடுத்து அவனுக்கு





நோயாகத் தெரிகிறது. இந்த பயம் அவனது மனத்திலிருந்து அகன்றாலே அவன் குணமடைவான்'' என்றார்.

அப்போது தனசேகரனின் மனைவி ''இதை நீங்களே அவரிடம் சொல்லி இருக்கலாமே'' எனவே பரமானந்தரும் சிரித்தவாறே ''ஒரு சிலருக்கு அவர்களது குற்றம் குறைகளை எடுத்துச் சொன்னால் அவர்கள் லேசில் அவற்றை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். உன் கணவன் அந்த ரகத்தைச் சேர்ந்தவன் அத்னால்தான் உன்னிடம் சொன்னேன். அவன் மனம் மாற வேண்டும்.'' என்றார்.

அப்போது அவள் ''நீங்கள் ஏதோ மருந்து தயாரிப்பது பற்றி சொல்ல நினைத்தீர்களே. அதனால் குணமடையாதா?'' என்று கேட்டாள். அவரும் ''அது ஒன்றும் மருந்தில்லை. உப்பும், சர்க்கரையும் கலந்த பொடிதான் அது. அவன் மனதில் அந்த மருந்து நோயைப் போக்கிவிடும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தினேன். தீர்த்தயாத்திரையின்போது உன் கணவன்முன் ஊராரோ உறவினரோ இல்லாததால் அதுபற்றிய நினைப்பே அவனுக்கு வரவில்லை. தன் நோய் குணமடைகிறது என்று எண்ணினான். ஆனால் இந்த ஊருக்குத் திரும்ப வந்ததும் மீண்டும் அந்த எண்ணங்கள் தோன்றி நோய் வந்துவிட்டதுபோலச் செய்துவிட்டது'' என்றார்.

அவள் ''அப்படியானால் நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கவே அவரும் ''நீ லட்சுணமனனையும் உறவினர்களையும் பற்றி உன் கணவனிடம் நல்லவிதமாக எடுத்துக் கூறு. இதனால் கொஞ்சம் கொஞ்சமாக அவன் எல்லோரும் நல்லவர்களே என்று எண்ண ஆரம்பிப்பான். பிறகு அவன் மனதில் புகுந்த பயம் போய்விடும்'' என்றார்.

தனசேகரனும் அவன் மனைவியும் ஆசிரமத்திலிருந்து திரும்பிச்

சென்றனர். அன்றிரவு அன் மனைவி அவனிடம் "ஊரில் எல்லோரும் லட்சுமணனைப் புகழ் கிறார்களே! நீங்கள் மட்டும் ஏன் அவரிடம் விரோதம் பாராட்டு கிறீர்கள்? அவர் உங்களுக்கு என்ன கெடுதல் செய்தார்?" என்று கேட்டாள்.

அதுகேட்டு தனசேகரன் சற்று யோசித்து "ஆமாம். லட்சுமணன் எனக்கு ஒரு கெடுதலும் செய்ய வில்லை. இந்த ஊருக்கு வந்ததும் அவன் முதலில் என்னைக் கண்டு தான் வியாபாரம் ஆரம்பிக்கப் போவதாகக் கூறி என் ஆசிகளை யும் கேட்டு வாங்கிக் கொண் டான். இன்றும் என்னைக் கண் டால் மரியாதையுடன் வணங்கு கிறான்" என்றான்.

அப்போது அவன் மனைவி "இப்படிப்பட்டவரையா நீங்கள் உங்கள் விரோதி என்று யோகி யிடம் கூறினீர்கள்? காரணமில் லாமல் லட்சுமணனைப்பற்றி நீங் கள் கெட்ட அபிப்பிராயம் கொண் டிருப்பதுபோலத் தெரிகிறது அதை முதலில் விட்டொழியுங் கள்" என்றாள்.

தனசேகரனும் "ஆமாம். நீ சொல்வது சரியே. காரணமில்லா மல் லட்சுமணன் மீது பகைமை கொண்டேன். இது தவறுதான்" என்றான். அப்போது அவன் மனைவி மருந்து என்று ஒரு பொட்டலத்தை எடுத்து நீரில் கரைத்து குடிக்கத் தன் கணவனிடம் கொடுத்து "இதைக் குடியுங்கள். அப்போது லட்சுணமனை மட்டுமல்ல, உங் கள் உறவினர்களையும்கூட உங் கள் நண்பர்களாகக் கருதுவீர்கள். பகைமை என்பது உங்கள் மனதி லிருந்து போய்விடும் உங்கள் நோயும் போய்விடும்" என் றாள்.

இவ்வாறாக தனசேகரனை அவனது மனைவி யோகி கூறிய வழியில் நல்லவனாக மாற்றிவிட் டாள். அவனது நோயும் போய் விட்டது!



# அம்புலிமாமா செய்திகள்



## இசையின் விசை!

வயல்களில் விளைச்சல் குறைந்தால் இசையால் விளைச்சலை அதிகரிக்கலாம். பசுக்கள் இசைகேட்டு அதிகப்படியான பால் கறக்கிறது. சில அலுவலகங்களில் பணியாளர்கள் நன்கு பணிபுரிய இசையை ஒலிக்கிறார்களாம். காதில் 'வாக்மெனை'ச் சொருகிக் கொண்டு படிப்பவர்களும் கணக்குப் போடுபவர்களும் உண்டு. இப்போது 'ஆபரேஷன் தியேட்டர்' களிலும் இசை பயன்படுகிறது. ஜெர்மனியில் மோன்ஸ்டன் பல்கலைக் கழக மருத்துவமனை டாக்டர்கள் இசை கேட்டவாறே இதில் அறுவை சிகிச்சைகளை செய்கிறார்கள். டாக்டர்களுக்கு இசை அறுவை சிகிச்சை செய்ய உற்சாகம் அளிக்கிறது. இசையால் நோயாளிகளுக்கு மயக்கம் கொடுக்கும் நாள்கூட அதிகத் தொலைவில் இல்லை என்றே கூறலாம்.

## பறக்கும் தட்டுகள்

வானவெளியில் தென்படும் பறக்கும் தட்டுகள் பற்றிய ஆராய்ச்சிகள் தற்போது அதிகரித்துவிட்டன. அமெரிக்காவைச் சேர்ந்த ரிச்சர்ட் தாம்சன் இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார். இவை திடீரெனத் தோன்றி மறைந்துவிடுவதால் விவரங்களைச் சேகரிப்பது மிகவும் சிரமமே. 1976ல் ஈரான் தலைநகர் டெஹ்ரானில் ஒரு பறக்கும் தட்டு தென்பட அதன் பின்னாலேயே ஒரு அமெரிக்கர் ஜெட் விமானத்தில் தொடர்ந்து சென்றாராம். ஒரு பறக்கும் தட்டின் ஒரு பகுதி விண்டு தரையில் கூட விழுந்ததாம். இந்த பறக்கும் தட்டுகளைப் பற்றிய வர்ணனைகள் நம் புராணங்களில் விமானங்கள் என்ற பெயரில் உள்ளதாகவும் கருதுகிறார்கள். தற்போது இந்தக் கருத்தைத் தாம்சனும் வலியுறுத்துகிறார். கிருஷ்ண பரமாத்மா விடுத்த அக்கினிச் சக்கரம் கூட இத்தகைய பறக்கும் தட்டு வகையைச் சேர்ந்தது என அவர் அபிப்பிராயப்படுகிறார்.





# மூன்று வரங்கள்

மலையன் ஒரு ஏழையின் மகன். மகா சோம்பேறி. ஒரு வேலையும் செய்யாமல் ஊர் சுற்றி வந்தான். அவன் தந்தை எப்படியோ பாடு பட்டுச் சம்பாதித்து அவனைப் பெரியவனாக்கிவிட்டான். குடும்பம் நடத்துவது மிகவும் சிரமமாகி விடவே அவன் மலையனை அதே ஊரில் யாரிடமாவது வேலைக்கு அமர்த்த எண்ணி அவனை அழைத்துக் கொண்டு கிளம்பினான்.

ஆனால் அந்த ஊரில் யாரும் மலையனுக்கு வேலை கொடுக்க முன்வரவில்லை. முடிவில் அவன் மலையனை அவ்வூர் மணியகாரரின் வீட்டில் கொண்டுபோய் வேலைக்குச் சேர்த்தான். மணியகாரரிடம் ஒரு வேலைக்காரன்கூட நிலைத்து இருந்தது இல்லை. காரணம் அவர் வேலைக்காரனுக்கும் சம்பளம் கொடாமலே வேலை வாங்கியதுதான்.

மலையனுக்கு இரண்டு வேளை சாப்பாடு கிடைத்ததேயொழிய சம்பளம் கிடைக்கவில்லை. அவன் மூன்று வருடங்களானதும் தான் வேலையிலிருந்து நிற்பதாக அவரிடம் கூறினான். மணியகாரரும் மூன்று ரூபாய் கொடுத்து 'உன் கணக்கு தீர்ந்தது' என்றார்.

அப்போது மலையன் "மூன்று வருடங்கள் வேலை செய்தும் ஒரு நல்ல துணிமணி எடுத்துக் கொடுக்கவில்லை. சம்பளமும் இவ்வளவு தானா!" என்று கேட்டான். மணியகாரரோ "அதெல்லாம் கிடையாது. இது கொடுத்ததே அதிகம் போ, போ" என்று விரட்டி விட்டார்.

மலையன் அந்த மூன்று ரூபாய்களோடு அருகிலுள்ள நகருக்குக்

—கி. வெங்கடாசலம்—



கிளம்பினான். அதற்கு ஒரு கணவாய் வழியே போயாக வேண்டும். அவன் அக்கணவாயில் கொஞ்சதூரம் போனதுமே ஒரு உயரமான பிச்சைக்காரன் அவனைப் பார்த்து "எனக்கு ஒரு ரூபாய் கொடு" என்றான்.

மலையனோ "என்னிடம் இருப்பது மொத்தமே மூன்று ரூபாய் தானே" எனவே அவன் "அதில் ஒன்றைக் கொடு. மீதம் உனக்கு இரண்டு ரூபாய் இருக்கிறதே. நீ கொடுக்கும் ரூபாயில் உடுத்த நல்ல துணி வாங்கிக் கொள்வேன்" என்றான். மலையனும் மனம் இளகி அவனுக்கு ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

இன்னும் சற்று தூரம் போனதும் அவன் முதலில் கண்ட பிச்சைக்காரனைவிடக் கொஞ்சம் உயரமான மற்றொரு பிச்சைக்காரனைக் கண்டான். அவனும் முதலாவது பிச்சைக்காரனைப் போலப் பேசி மலையனிடமிருந்து ஒரு ரூபாயை வாங்கிக் கொண்டு விட்டான்.

மலையன் கணவாயின் முடிவிற்கு வந்தபோது அங்கும் ஒரு உயரமான பிச்சைக்காரன் இருந்தான். அவனும் மலையனிடம் பேசி, மீதமிருந்த ஒரு ரூபாயையும் வாங்கிக் கொண்டுவிட்டான். அப்போது அவன் "நீ உன்னிடமிருந்த மூன்று ரூபாயையும் கொடுத்துவிட்டாய். ஒரு ரூபாய்க்கு ஒரு வரம் வீதம் மூன்று வரங்கள் கொடுக்கிறேன். முதலாவதைக் கேள்" என்றான்.

மலையன் சற்று யோசித்து "கண்ணன் குழல் ஊதி எல்லோரையும் ஆட வைத்தார். அதுபோல எனக்கு ஒரு குழல் கொடுத்தால் அதை இசைத்து எல்லோரையும் ஆட வைப்பேன்" என்றான்.

அவனும் "சரி. அது கிடைக்கும். அடுத்து என்ன வேண்டும்?" என்று கேட்டான். மலையனும் "ஒரு பொருள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் அதைச் சரியாக அடிக்கக்கூடிய உண்டிக்கோல்

வேண்டும்'' என்றான்.

அவனும் "சரி. அதுவும் கிடைக்கும். மூன்றாவதாக என்ன வேண்டும்?'' என்று கேட்டான். மலையனும் "நான் யாரிடம் எதைக் கேட்டாலும் அவர் அதை எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்றான். அவனும் "இதோ நீ கேட்ட புல்லாங்குழலும் உண்டிக் கோலும். நீ கேட்ட மூன்றாவது வரத்தின் படியும் நடக்கும்'' என்று கூறி திடீரென மாயமாய் மறைந்து போனான்.

மலையன் வெயிலைத் தாங்க முடியாமல் ஒரு மரத்தடியே படுத்துத் தூங்கிவிட்டு மாலையாகும் போது நகரை அடைந்தான். அங்கு ஒரு கடைக்காரனிடம் தனக்கு வேண்டிய துணிகளைக் கேட்க அவன் உடனேயே அவன் கேட்டவற்றை எடுத்துக் கொடுத்தான். இன்னொருவனைக் கேட்டு ஒரு குதிரையை வாங்கிக் கொண்டான். அவன் நல்ல ஆடைகளை அணிந்து கொண்டு குதிரைமீது அமர்ந்து தன் ஊருக்குச் சென்றான்.

அங்கு அவன் மணியகாரரைச் சந்தித்தான். அவர் அவனைக் கண்டு ஆச்சரியப்பட்டு "அடேயப்பா! நீ பெரிய மனிதனாக ஆகிவிட்டாயே!'' என்று கேட்டார். மலையனும் ஆமாம் எனவே அவர் "அடடே. கையில் புல்லாங்குழல் வேறு. சங்கீதம் கற்றுக் கொண்டிருக்கிறாயா?'' என்று கேட்டார்.



மலையனும் "ஆமாம். அது மட்டு மல்ல. இந்த உண்டிக் கோலால் எதையும் என்னால் அடிக்க முடியும். அதோ தெரியும் பனைமரத்தின் மீது உட்கார்ந்திருக்கும் பறவையைக் கூட அடிக்க முடியும்" என்றான்.

மணியகாரரோ "போதும் உன் சவடால். உன்னால் அதை அடிக்க முடியாது. நீ மட்டும் அதை அடித்துவிட்டால் என் நிலத்தை எல்லாம் கொடுப்பதாகப் பந்தயம் வைக்கிறேன். நீ அதை அடித்து விட்டால் நானே அப்பறவையை எடுத்து வந்து உன்னிடம் கொடுக்கிறேன். ஆனால் இதெல்லாம் நீ பறவை அடித்த பிறகுதானே. நீ எங்கே அடிக்கப் போகிறாய்?" என்று கூறி ஏளனமாகச் சிரித்தார்.

மலையன் உண்டிக் கோலைக் கொண்டு அந்த மரத்தின் மீதிருந்த பறவையை அடித்தான். அது கீழே ஒரு பெரிய பள்ளத்தில் விழுந்தது. பந்தயப்படி மணியகாரரர் அதை எடுத்துவர அப்பள்ளத்தில் குதித்தார். அங்குள்ள முட்செடிகள் அவரது உடலில் குத்தின. இதே சமயம் மலையன் குழலை எடுத்து ஊத அவர் ஆடலானார். அவரது ஆடை முள்ளில் சிக்கிப் பல இடங்களில் கிழிந்து போயிற்று. உடலில் கீறல்களும் காயங்களும் ஏற்பட்டன.

சற்று நேரத்திற்குப்பின் மலையன் குழல் ஊதுவதை நிறுத்தவே மணியகாரரர் முக்கி முனகிக் கொண்டு வெளியே வந்தார். அப்போது மலையன் "நீங்கள் என்னை இந்த ஊரிலிருந்து அனுப்பியபோது இதுபோலக் கிழிந்த ஆடைகளோடு அனுப்பினீர்கள். இப்போது நீங்கள் இப்படியே ஊரை விட்டு ஓடுங்கள்" என்றான்.

பந்தயப்படி மணியகாரரர் தம் நிலங்களை எல்லாம் மலையனிடம் ஒப்படைத்துவிட்டு அந்த ஊரைவிட்டே போய்விட்டார்.



# இயற்கை விநோதங்கள்

## இறக்கை ஆட்டாமல் பறக்கிறது!

பொதுவாகப் பறவைகள் தம் இறக்கைகளை விரித்துப் பறக்கும். ஆனால் ஆஸ்பர்ட்ரோஸ் என்ற வாத்துரகப் பட்சிகள் மட்டும் இறக்கைகளை ஆட்டாமல் பறந்து செல்கின்றன. இவை தொடர்ந்து ஆறு நாட்கள்கூட இப்படியே பறக்க முடியுமாம். இந்த ஆறு நாட்கள் பறக்கையில் தூங்கவும் செய்கின்றன. வானத்தில் பறக்கும்கபோது சுகமாகக் கண் மூடித் தூங்குகின்றனவாம்.





## மலர்கள் எப்படித் தூங்குகின்றன?

மலர்கள் தூங்குவதை நீங்கள் கண்டிருக்கிறீர்களா? ஒரு சில மலர்களாவது தம் இதழ்களை மூடிக் கொண்டு தூங்குவதைக் கண்டிருக்கலாம். ஆனால் இது தூக்கம் அல்ல. ஏனெனில் சில மலர்கள் வெப்பதட்பநிலைகளிலிருந்து தம்மைக் காக்க இவ்வாறு செய்கின்றன. இரவில் வெப்பம் தணிந்து சில்லென ஆகும்போதும், இருள் சூழும்போதும் சில மலர்கள் இதழ்களை மூடிக் கொள்கின்றன. இதனால் அவை தூங்குவதுபோலத் தோன்றும். சில மலர்கள் பகலின் வெப்பத்திலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளத் தம் இதழ்களை மூடிக் கொள்கின்றன.

## மாறும் மணல் திட்டுகள்!

பாலைவனங்களில் மணல் திட்டுகள் ஒருநாள் இருப்பதுபோல மறுநாள் இராது. இவை நாளுக்குநாள் மாறிக் கொண்டே இருக்கும். பாலைவனங்களில் வீசும் சுழல் காற்றுகளே இத்தகைய மாறுதல்களைச் செய்கின்றன. கண்மூடிக் கண் திறப்பதற்குள் இக்காற்று மணல் திட்டைக் கலைத்தோ புதிய திட்டுகளை உருவாக்கியோ விடுகிறது. எனவே பாலைவனப் பயணத்தில் எங்கு வந்தோம், எங்கு செல்கிறோம் என்பதெல்லாம் சரியாகத் தெரியாமல்தான் இருக்கும்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும்**



G. Srinivasa Murthy



Purushottam Vagga

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * ஏப்ரல் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்பு களை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## பிப்ரவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **மலையாகும் நிஜ வடிவம்**

இரண்டாவது போட்டோ: **கலையாகும் நிழல் வடிவம்**

பரிசு பெற்றவர்: **அ. சங்கர், கள்ளிக்கோட்டை-2**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

AMBULIMAMA (Tamil) April 1994 Regd. No. M. 4863